# பாரதியாரின் தமிழ்மொழிப் பற்று

முனைவர் கி. கௌரி




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை
மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை - 600 113

டாக்டர பா. சிவந்தி ஆதித்தனார் அறக்கட்டளைச் சொற்பொழிவு
(அறக்கட்டளை நிறுவியவர் : டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார், அதிபர், தினத்தந்தி)
வரிசை எண் : 18

## BIBLIOGRAPHICAL DATA



| | | |
|---|---|---|
| Title of the Book | : | Pāratiyārin̲ tamil̲mol̲ip par̲r̲u |
| Author | : | Dr. K. Gowri<br>Dept. of Tamil<br>Sri Sarada Women's College<br>Salem |
| General Editor | : | Dr. K. A. Gunasekaran<br>Director<br>International Institute of Tamil Studies<br>Tharamani, Chennai-600 113 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus,<br>Chennai-600 113<br>Ph: 22542992 |
| Publication No. | : | 664 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2010 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 10 Point |
| No. of Pages | : | x + 102 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 50/- (Rupees Fifty Only) |
| Printed by | : | United Bind Graphics<br>43/95, Millers Road, Kilpauk<br>Chennai - 600 010 |
| Subject | : | The language of Poet Subramaniya Bharathi |

பேரா. முனைவர் கரு. அழ. குணசேகரன்
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113

## அணிந்துரை

**பிறநாட்டு நல்லறிஞர்
சாத்திரங்கள் தமிழ் மொழியில்
பெயர்த்தல் வேண்டும்
இறவாத புகழுடைய
புதுநூல்கள் தமிழ்மொழியில்
இயற்றல் வேண்டும்**

தமிழ்வளம் பெருக வேண்டும் என்கிற அவாவில் பாரதி தொலைதூரப் பார்வை கொண்டு எழுதிய வரிகள் இவையாகும். பாரதி பலமொழி கற்றவன். அவன் சொல்கிறான்:

**தமிழ்நாட்டில் தமிழ் சிறந்திடும். பிற தேசம் முழுவதும் எப்போதும் போலவே வடமொழி வாழ்க. இன்னும் நாம் பாரத தேசத்தினர் ஐக்கியத்தைப் பரிபூரணமாகச் செய்யுமாறு நாடு முழுவதிலும் வடமொழிப் பயிற்சி மேலும் மேலும் ஓங்குக. எனினும் தமிழ்நாட்டில் தமிழ்மொழி தலைமை பெற்றுத் தழைத்திடுக**

என்று சொல்லும் பாரதியின் தமிழ்ப்பற்று வெறுமனே தமிழ்ப்பற்றாக மட்டுமே இல்லை. மாறாக, தமிழ் தழைக்கப் பல புதுப்புது கவிதை, நாடகம், காவியம் எனச் செய்தளித்த புதுமைக் கவிஞனாவான் .

இந்நூலாசிரியர் முனைவர் கௌரி அவர்கள் இவை போன்ற பல எடுத்துக்காட்டுகளைத் தந்து பாரதியின் தமிழ்மொழிப் பற்றுக் குறித்து விளக்கிச் செல்கிறார். பாரதியின் புதுச்சொல்லாக்கங்கள் எனும் இவரது பட்டியல் நூல்வாசிப்போர்க்குப் பயன்தரத் தக்கதாகும்.

| | |
|---|---|
| **அக்கினிக் குஞ்சு,** | **தொண்டச்சி,** |
| **அடிமைச்சி,** | **புரட்சி,** |
| **அரசாணி,** | **பூத்தி,** |
| **பொதுவுடைமை,** | **வினைச்சி,** |
| **தாழ்ச்சி,** | **தர்க்கி** |

என்பதான பல சொற்களைத் தந்துள்ளார். பாரதியை நாம் தமிழ்ப் பற்றாளராக மனங்கொள்ளச் செய்ய நூலாசிரியர் பல நிலைகளில் தன் எழுத்துருவில் தந்துள்ளார்.

| வடமொழிச் சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| அமிர்தம் + பொய்கை | - | அமிர்தப்பொய்கை |
| சகி + பெண்கள் | - | சகிப்பெண்கள் |
| சோதி + மணி | - | சோதிமணி |
| பரம் + நிலை | - | பரநிலை |

எனுமாறு தமிழாக்கம் செய்துள்ள பாரதியின் முயற்சிகளை இந் நூலாசிரியர் பக்கங்கள் தோறும் தான் எடுத்துக்கொண்ட தலைப்பிற் கிணங்க எடுத்துக்காட்டுக்கள் தந்து விளக்கியுள்ளமை பாராட்டுக்குரியது ஆகும்.

**வான மளந்ததனைத்து மளந்திடு**
**வண்மொழி வாழியவே**
**ஏழ்கடல் வைப்பினுந் தன்மணம் வீசி**
**யிசை கொண்டு வாழியவே**
**எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ்மொழி**
**என்றென்றும் வாழியவே**

எனும் பாரதியின் பல கவிதைக் குரல்களைப் பதிவு செய்து காட்டியுள்ள இந்த நூல் பாரதியின் தமிழ்ப்பற்றுக் குறித்த மற்றொரு பார்வையினைக் கொள்ள வழி வகுக்கும் என்பதில் ஐயமில்லை.

இச்சொற்பொழிவின் எழுத்துரு சொற்பொழிவன்றே அச்சிட்டு நூலாக வெளிவருவது மிகவும் பாராட்டத்தக்கது. இவ் அறக்கட்டளையைத் தம் பெயரில் இந்நிறுவனத்தில் நிறுவிய தாமரைத்திரு டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார் அவர்களுக்கும், அதைப் பெற்றுத் தந்த தொல்லியல் அறிஞர் நெல்லை நெடுமாறன் அவர்களுக்கும் நன்றி.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையைக் காட்டிவரும் நிறுவனத் தலைவரும் தமிழக அரசின் முதல்வருமான மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்களுக்குத் தமிழுலகம் என்றும் நன்றிக் கடன்பட்டுள்ளது.

தமிழ்ப்பணிகளுக்கு ஆற்றுப்படுத்தி வரும் மாண்புமிகு தமிழக நிதியமைச்சர் பேராசிரியர் க. அன்பழகன் அவர்களுக்கு எம் நன்றி என்றும் உரியது.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும் செய்தித் துறை அரசுச் செயலாளர் திரு க. முத்துசாமி இ.ஆ.ப. அவர்களுக்கும் நன்றி.

இச்சொற்பொழிவின் எழுத்துருவைத் திருத்தம் செய்து இந்நூலைச் செம்மையாகப் பதிப்பித்துள்ள முனைவர் ஆ. தசரதன் அவர்களுக்கும், இச்சொற்பொழிவு மற்றும் நூல் வெளியீடு தொடர்பான அனைத்து ஏற்பாடுகளையும் செய்த நிறுவனப் பணியாளர்கள் மற்றும் கணிப்பொறியாளர் திருமதி எ.ம. லட்சுமி ஆகியோருக்கும் எம் நன்றிகள் என்றுமுண்டு. இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தாருக்கு எம் பாராட்டுகள்.

இயக்குநர்

# ஆசிரியர் குறிப்பு



**பெயர் : கி. கௌரி கந்தவேல்**

தன்னுடைய முதுகலைத் தமிழ்ப் பட்டமேற்படிப்பை ஸ்ரீசாரதா மகளிர் கல்லூரியில் பயின்றார். ஆய்வியல் நிறைஞர் பட்டத்தைச் சென்னையில் உள்ள எத்திராஜ் மகளிர் கல்லூரியில் முடித்துள்ளார். முனைவர் பட்ட ஆய்வினைச் சேலத்தில் உள்ள பெரியார் பல்கலைக்கழகத்தில் முடித்துள்ளார்.

தொடக்கத்தில் ஏ.வி.வி.எஸ் மகளிர் கல்லூரியில் சிறிதுகாலம் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றியுள்ளார். தற்பொழுது தான் பயின்ற ஸ்ரீசாரதா மகளிர் கல்லூரியிலேயே தமிழ்த் துறையில் பணியாற்றிவருகிறார்.

## நன்றியுரை

டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார் அறக்கட்டளைச் சொற்பொழிவு வரிசையில் 18ஆவது பொழிவாகப் 'பாரதியாரின் தமிழ்மொழிப் பற்று' என்ற தலைப்பில் பொழிவாற்ற அனுமதியளித்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

கி. கௌரி

## பொருளடக்கம்

# பாரதியாரின் தமிழ்மொழிப் பற்று

இந்தியா அடிமை இருளில் அழுந்திக் கிடந்தபொழுது பிறந்தவர் பாரதியார். பாரதியார் பிறந்தபொழுது தமிழ்க்கவிதை தன் நறுமணத்தை இழந்திருந்தது. கவிஞர்கள் கவிதை இயற்றுவதைச் செப்பிடுவித்தையாகக் கருதியிருந்தனர். ஏட்டுக் கற்பனைதான் கவிதை என்று நம்பியிருந்த காலம் அது.

கவிஞர்கள் பண்பற்ற கவிதைகள் எழுதித் தள்ளிக் கொண்டிருந்த காலத்தில் தோன்றியவர் பாரதியார். நாட்டு விடுதலை பற்றிய எண்ணமே பாரதியாரின் மனதில் எப்பொழுதும் சுடர்விட்டுக் கொண்டிருந்தது.

ஆச்சாரமான ஐயர் மகனாகப் பிறந்தும் அந்தச் சமூகக் கட்டுப்பாட்டுக்குள் அழுந்திக் கிடக்க இயலவில்லை. அவரைப் பொறியாளன் ஆக்கவேண்டுமென்று ஆர்வம் கொண்ட தந்தை ஆங்கிலப் பள்ளிக்கு அனுப்பினார். சிறுவனாக இருந்தபொழுதே பாரதியின் மனம் தமிழ்மீதே மிகவும் பற்றுக் கொண்டிருந்தது. தமிழ் மொழியின் இனிய சந்தச் சொற்கள் பாரதியாரைத் தன்வயப் படுத்தியிருந்தன.

பாரதியாரின் தோற்றம் பற்றிக் கூறும் பாரதிதாசன்,

*தமிழகம் தமிழுக்குத் தகுமுயர்வளிக்கும்*
*தலைவனை எண்ணித் தவங்கிடக்கையில்*
*இங்குத் தமிழ்க் கவிஞராய்த் தோன்றியவர்*

என்று கூறுகிறார்.

**பாரதியாரின் விருப்பம்**

நம் நாட்டு மக்கள் செக்கிலிட்ட மாடு போல உழன்று கொண்டிருந்தனர். அவர்களுக்கு அடிப்படைக் கல்வி வழங்க வேண்டும் என்று விரும்பினார் பாரதியார். மக்கள் ஒருவருக் கொருவர் ஒத்துழைத்துத் தொண்டாற்ற வேண்டும் என்று விரும்பினார். பாரதநாடு அனைத்துத் துறைகளிலும் முன்னேற்றம் அடையவேண்டும் என்று விரும்பினார்.

பாரத நாட்டின் பழம்பெருமையை அது அடையவேண்டும் என்றார். இந்த விருப்பத்தின்படியே செயல்பட்டார்.

*நமக்குத் தொழல் கவிதை நாட்டிற்குழைத்தல்*
*இமைப் பொழுதுஞ் சோரா திருத்தல்*

என்பதைத் தமது இலட்சியமாகக் கொண்ட பாரதியார் தனிக் கவிதைகள், குறுங்காவியம், கவிதை நாடகம், சிறுகதைகள், புதினம், கட்டுரைகள், குழந்தை இலக்கியம், பயண நூல் வரலாறு, வசன கவிதை, மொழிபெயர்ப்புகள் முதலிய மாறுபட்ட துறைகளிலும் தமது திறமையை வெளிக்காட்டியிருக்கிறார்.

இந்த நூற்றாண்டில் தமிழ்மொழி ஓரளவு வளர்ச்சியடைந்துள்ளது. பாரதியார் பல மொழிகளில் புலமை பெற்று இருந்தாலும் தமிழ்மொழியே அவரின் உயிர்மூச்சாக இருந்தது.

**தமிழின் பெருமையும் சிறப்பும்**

பாரதியின் மொழிப்பற்றைத் தனியே ஆய்வதற்கு முன்னர், தமிழின் பெருமையையும் சிறப்பையும் ஓரளவு அறியலாம். இவ்வுலகில் பல மொழிகள் தோன்றி மறைந்துள்ளன. அவற்றுள் சில மொழிகள் பேச்சு வழக்கு இழந்து வெறும் இலக்கிய மொழியாக மட்டும் உள்ளன. ஆனால் இன்றும் இளமைப் பொலிவுடன் விளங்குவது தமிழ்மொழியாகும். தமிழ்மொழி பெருமைமிக்க வரலாறு உடையது.

'தமிழ்' என்பதற்கு நேரான வடசொல் 'திராவிடம்' என்பதாகும்.

*ஆரியர் வருவதற்கு முன் திராவிடமொழி என்பது*
*இந்திய நாடு முழுதும் இருந்தது*

என்கிறார் டாக்டர் மு. வரதராசனார்.

கடந்த நூற்றாண்டில் உலக மக்களிடையே ஆங்கிலயேர் பெற்றிருந்த பெருமையையும், செல்வாக்கையும் இருபது நூற்றாண்டுகளுக்கு முன்பு தமிழர்கள் பெற்றிருந்தனர்.

மக்களின் ஆட்சியும், வாணிகமும் சிறப்புற்று விளங்கும் நிலையில் அந்த மக்களின் மொழியும் வளம்பெற்றுச் சிறப்புறுதல் இயற்கை. ஆங்கில மொழி உலகில் சிறப்புற்று இருந்த காலத்தில்

அச்சுப்பொறி, அறிவியல், போக்குவரத்துக் கருவிகள் முதலியன அதன் வளர்ச்சிக்குத் துணைநின்றன. ஆங்கிலேயரும் தம் வாழ்க்கையை வளப்படுத்திக் கொண்டதோடு தம் மொழியையும் வளப்படுத்திக் கொண்டனர்.

ஆனால் பழந்தமிழர் சிறப்புற்று இருந்த காலத்தில் இத்தகைய துணைக் கருவிகள் ஏதுமில்லை. தமிழரும் தம் மொழியைப் பரப்புவதில் ஆர்வம் கொள்ளவில்லை.

தக்க கருவிகள் இருந்து ஏற்ற முயற்சி செய்திருப்பின் தமிழ் இன்று உலகச் செம்மொழிகளுள் ஒன்றாக மட்டும் கருதப்படாமல் உலகப்பெரு மொழிகளில் ஒன்றாகக் கருதப்படும் நிலையை அடைந்திருக்கும்.

## மொழியின் தோற்றம்

மனித வாழ்க்கையிலும், பண்பாட்டிலும் மொழியின் பங்கு இன்றியமையாதது. மனிதனை மனிதனாக மாற்றுவது மொழி.

ஐந்தறிவு படைத்த விலங்குகளிடமிருந்து ஆறறிவு படைத்த மனிதனை வேறுபடுத்திக் காட்டுவது மொழி. அத்தகைய மொழி எப்போது தோன்றியது? உலகில் எத்தனை வகையான மொழிகள் வழங்கப்படுகின்றன? என்பது பற்றிப் பல்வேறுபட்ட கருத்துகள் நிலவுகின்றன.

## மொழி பற்றிய கருத்துகள்

மனிதனின் படைப்பில் தலைசிறந்த ஒன்று மொழி. மொழியின் பெருமையினை,

> *மொழி மாந்தனின் தலைசிறந்த படைப்புகளில் தலைசிறந்த ஒன்று. இயற்கை உணர்வுகளின் உண்மையைக் காட்டும் உணர்ச்சி ஒலிகளே சொற்கள். எண்ணங்களின் கலைவண்ண ஆடையே மொழி என்பது மறுக்கொணாதது*
>
> *மொழி என்பது பொருளுடைய ஒலிகளாகி ஒருவர் கருத்தை மற்றவருக்கு உணர்த்தவல்லது என்று மொழியியலார் கூறுவர்*

என்கிறார் இரா. சனார்த்தனம் அவர்கள்.

**தோற்றம் பற்றிய கருத்துகள்**

மொழியின் தோற்றம் பற்றிப் பலரும் பலவிதமான அறிவியலுக் குகந்த விளக்கம் கூறியுள்ளனர். இருப்பினும், மொழி கடவுளால் படைக்கப்பட்டது என்னும் கருத்தை ஆன்மிக அடிப்படையில் எண்ணுபவர்கள் உளர். தமிழின் தோற்றம் குறித்தும் அத்தகையதொரு கருத்து உண்டு.

> *சிவபெருமான் ஊழிக்காலத்தில் நடனம் ஆடித் தன் கையில் உள்ள உடுக்கையை அடித்த பொழுது அதன் ஒரு பக்கத்திலிருந்து வடமொழியும், மற்றொரு பக்கத்திலிருந்து தமிழ்மொழியும் பிறந்தன என்பது ஒரு கருத்து. கிறிஸ்துவ நூல்கள் ஆதாம் ஒவ்வொரு பொருளையும் கடவுள் முன் கொண்டுவர, கடவுள் அவற்றிற்குப் பெயர் கொடுத்தார். அப்படியே ஆதாமும் கூற மொழி பிறந்தது என்கின்றனர். முதலில் அனைத்து மக்களும் ஒரே மொழியைப் பேசினர். அவர் கடவுளுக்கு எதிராகப் பாவேல் கோபுரத்தைக் கட்ட முற்பட்டபோது அதைத் தடுக்க அவர்கள் பல்வேறு மொழிகள் பேச ஏவப்பட்டனர் எனவும் நம்புகின்றனர். எகிப்தியர், சீனர், கிரேக்கர், ஸ்காண்டிநேவியர் போன்ற மக்களும் மொழியைத் தோற்றுவித்தவர் கடவுளே என நம்பிக்கையைக் கொண்டு இருந்தனர். இவை தவிர மொழித் தோற்றம் பற்றி வேறுசில கருத்துகள் நிலவிய போதும் இது பற்றித் தெளிவான முடிவு இன்று வரை ஏற்படவில்லை. மொழி பற்றிய ஆராய்ச்சி வளர்ந்து கொண்டே இருக்கின்றது.*

என்கின்றது தினமலர் இயர்புக்.

தமிழர் என்ற பெயரும் 'தமிழ்' என்ற சொல்லின் அடிப்படையிலேயே வழங்கப்படுகிறது என்றும் சொல்வர்.

> *தமிழர் என்ற பெயர் தமிழ் என்ற மொழிப்பெயர் அடிப்படையில் தோன்றியது ஆகும். தமிழ் மொழியைப் பேசுபவர் தமிழர் என அழைக்கப்*

*பட்டனர். பேசுபவர் என்பது இங்கே தமிழைத் தலைமுறை தலைமுறையாகத் தம் தாய்மொழியாகக் கொண்டு பேசுபவரைக் குறிக்கும்.*

என்கிறார் டாக்டர் க.ப. அறவாணன்.

தமிழ்மொழி தோன்றிய காலத்தைச் சரியாகக் கூற இயலாது. இனிய இலக்கிய இலக்கணங்களைப் பெற்றிருப்பதால் மட்டும் சிறப்புடையது அல்ல. இனிமைப்பண்பும், எளிமையான அமைப்பும் கற்போர் உள்ளத்தைக் கவரும் ஆற்றல் கொண்டது தமிழ்மொழி.

இம்மொழி நன்கு வளர்ந்து முழுமைநலம் கொண்டது. தமிழ்ச் சான்றோர்கள் தக்க முறையில் வாழ்க்கை வழிமுறைகளை ஆராய்ந்து வகுத்து வைத்துள்ளனர். சிறந்த வாழ்க்கைக்கு உரிய நெறிகள் தமிழ்மொழியை விட வேறுமொழியிலிருந்து கொண்டு வருதல் என்பது இயலாத ஒன்று.

## மொழியின் இன்றியமையாமை

மொழி ஒரு நாட்டிற்கு எத்தனை இன்றியமையாதது என்று திரு.வே. கபிலன் சிறப்பாகக் கூறியுள்ளார்.

*சைகையில் வாழ்ந்தபோது மனிதனுக்கும் மிருகத்துக்கும் அதிக வித்தியாசம் இருந்ததாக நமக்குத் தெரியவில்லை.*

*ஒலி வளர்ச்சியில் ஒளியைப் பெற்ற கட்டத்தில் பிறந்த மொழிக்குப் பிறகே மனிதனுக்கும் மிருகத்துக்கு மிடையே மிகப்பெரிய இடைவெளி ஏற்பட்டதென்கிறது நாம் காணும் நமது பூர்வீக வரலாறு.*

*அப்படிப்பட்ட மொழியை ஒரு நாடு இழக்குமானால் அது எல்லாவற்றையுமே இழந்துவிட்டதாகத்தான் பொருள்.*

என்றார்.

எளிமை என்பது பாரதி காலத்துக்கு முன்பு இல்லாத ஒன்று. கடின நடையில் எழுதுவதையே பெருமையாகக் கருதிய காலம் அது.

> *இதை மாற்றிப் புதுமை செய்தவர் இராமலிங்க அடிகள். அவரது பாடல்கள் எளிமையானவை. எளிய சந்தத்தைக் கொண்ட இசைப்பாடல்களாகிய கீர்த்தனைகளையும், கும்மி முதலிய எளிய நாட்டுப் பாடல் சந்தத்தையும் இன்னும் எளிமையான உரைநடையினையும் கையாண்டு வெற்றி பெற்றவர் இராமலிங்கர். பாரதியார் இராமலிங்கர் மறைந்த (1874) பின் சில ஆண்டுகளில் (1882இல்) தோன்றியவர். அதனால் இராமலிங்கரின் அருட்பாவைப் படித்துப் பயன்பெற்றவர். அதனால் கவரப் பெற்றவர். எனவே தன் பாட்டின் போக்கை எளிமை தழுவியதாகப் பொதுமக்களின் எளிய சந்தம் பெற்றதாக அமைத்துக் கொண்டார்*

என்கிறார் டாக்டர் பூவண்ணன்.

பாரதி காலத்தில் வாழ்ந்த புலவர்கள் பண்டிதப் புலமையில் பெருமைப்படுபவர்களாகவே இருந்தனர். தமது நடையை மக்கள் புரிந்துகொள்ள வேண்டும் என்று எண்ணாமல் தமது நடை கடுநடையாக அமைய வேண்டும் என்பதையே குறிக்கோளாகக் கொண்டிருந்தனர்.

இதனைச் 'சோமலெ' அவர்கள் 'தமிழ் இதழ்கள்' பற்றிய சென்னைப் பல்கலைக்கழக ஆய்வுப் பொழிவில் பாரதிகாலப் புலவர்களைப் பற்றிக் கூறுகையில் பின்வருமாறு கூறுகிறார்:

> *சமயத்தைப் பற்றி எழுதும்போதும் சரி, சங்க இலக்கியத்தைப் பற்றி எழுதும்போதும் சரி அவர்கள் இலக்கண வரம்புடன் எழுதினார்கள். குறிப்பிட்ட சிலர் மட்டும் படிப்பதற்காக எழுதினார்கள்.*

இத்தகைய சூழலில் தமிழின் உண்மையான கவிதை ஒளியை உலகமெங்கும் பரப்பியவர் பாரதியார்.

**மொழி வளர்த்த பாரதியார்**

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கவிதை இயற்றிய கவிஞர்கள் பழம்பெருமை என்ற பெயருடன் பிறமொழிச் சொற்களைக் கலந்தும், கடுநடையுடனும் கவிதைகள் இயற்றினர்

ஒருசிலர் மட்டுமே இனிய எளிய நடையில் கவிதை இயற்றினர். அவர்கள் தெருப்பாடகர்களாகக் கருதப்பட்டனர்.

> *மேனாட்டவர் காட்டிய புதிய இலக்கிய வெளிச்சங்களை ஒட்டித் தமிழிலும் சிறுகதை, நாவல் எனும் புதிய இலக்கிய வகைகளைச் சோதனை செய்யும் முயற்சிகளும் ஒருபுறம் நிகழ்ந்த வண்ணம் இருந்தன... தமிழ்ப் பண்டிதர்கள் ஆதீன மடங்களின் ஆதரவோடு உலா, அந்தாதி போன்ற இலக்கிய வகைகளைக் கைக்கொண்டு இறைவனைத் துதித்துப் பாடலியற்றினர். அதே சமயத்தில் கோபாலகிருஷ்ண பாரதி, அருணாசலக் கவிராயர், அண்ணாமலை ரெட்டியார் போன்ற ஒரு சிலர் எளிய இனிய நடையில் பாடல்கள் புனைந்தனர். ஆனால் பண்டிதர்களின் பார்வையில் இவர்களெல்லாம் தெருப்பாடகர் களாகக் காணப்பட்டனர். அதனால்தான் நந்தனார் சரித்திர நூலுக்கு மீனாட்சிசுந்தரம் பிள்ளையிடம் முன்னுரை வாங்க, கோபால கிருஷ்ண பாரதி தவம் கிடக்க வேண்டிய அவலநிலை ஏற்பட்டது. பழந்தமிழ் நடை ஆங்கில வாடை என்னும் இரு பெரும் பண்பு களோடு மடங்களும் ஆதினங்களும் ஆதரவு நல்க ஆங்கில ஆட்சிக்கு வெண்சாமரம் வீசிய புலவர் குழாம் மத்தியில் புதுப்பாடகனாய் மகாகவி பாரதியார் தோன்றினார். தனது 15ஆம் வயதிலேயே தந்தைக்கு நேர்ந்த பேரிடியால் வெள்ளைக்காரர் விரோத உள்ளத்தோடு கவிதை எழுதத் தொடங்கினார்* (கைலாசபதி, 1984, ப. 26).

சமுதாயத்தைப் பாடுபொருளாகக் கொண்டு மக்களுக்காகப் பாட நினைத்த பாரதிக்குப் பண்டித நடை ஒத்துவரவில்லை. எனவே எளிமையான நடையில் பாடல்கள் இயற்றிப் பெயர் பெற்றார்.

## நாடும் மொழியும்

இந்தியா பலமொழி, பல இன, பல வகையான பண்பாட்டு முறைகளால் அமைந்த ஓர் அமைப்பாகும். இந்திய நாட்டில் மொழி

ஒரு கருவியாக மட்டும் பயன்படாமல் இனத்தை, மக்கள் வாழுகின்ற பகுதியையும் குறிப்பதாகக் கருதப்படுகிறது. இந்திய நாட்டைக் குறிப்பிடும்பொழுது,

*In India along with regional identity religious and ethnic identities are also favoured and advocated*

என்றும்,

*In the Indian context it is language and regional identities that superside national identity*

என்றும் குறிப்பிடுவார்கள்.

ஒரு சமுதாயத்தின் அன்றாட இயக்கத்திற்கும், ஒரு நாட்டின் இயக்கத்திற்கும் மொழி ஒரு முக்கியமான கருவியாகப் பயன்பட்டு வருகிறது.

ஒவ்வொரு நாட்டின் வளர்ச்சிக்கும் அந்த நாட்டின் மொழியே காரணமாக இருந்திருக்கிறது.

**மொழியின் வரலாறு**

கீழ்த்திசை நாடுகளில் தமிழ்ப் பண்பாடு பழங்காலத்திலேயே பரவியது.

*வரலாற்றுப் பேராசிரியர்கள் 'திராவிடர்கள் இந் நாட்டின் பழங்குடியினர்' எனத் தெளிவுபடுத்து கின்றனர்'*

இத்தகைய பழங்குடியினர் பேசிய மொழியும் வெகு பழமையான தாகவே திகழ்ந்தது. எந்தவொரு மொழியின் வரலாற்றை எடுத்துப் பார்த்தாலும் ஒவ்வொரு காலக்கட்டத்திலும் சமுதாயத்தில் அவ்வப் போது ஏற்பட்டு வரும் மாற்றங்களின் அடிப்படையில் அதைச் சார்ந்த மொழிகளிலும் குறிப்பிடத்தக்க மாற்றங்கள் நிகழ்ந்திருக்கின்றன.

**அன்றைய தமிழ்**

கரடுமுரடான பல பாதைகளைக் கடந்து வந்து சரித்திரம் படைத்த தமிழ்மொழி மிகவும் தொன்மையான மொழி.

**பாரதியின் மொழிப்பற்று**

சுவாசிப்பதற்குக் காற்று எந்த அளவிற்கு அவசியமோ அந்த அளவிற்கு மனிதனுக்கு வாழ்வதற்கு மொழி அவசியம். பாரதியார்

தமது சிறுவயது முதல் தம்முடைய தாய்வழிப் பாட்டனாரிடம் தமிழ்ச் செய்யுள் கற்பதில் பொழுதுபோக்கினார். ஏழு வயது முதல் கவி பாடும் வல்லமை பெற்றார். பத்து வயது நிரம்புவதற்குள் தமிழ்ச் செய்யுள் இயற்றும் திறமை பெற்றவராகத் திகழ்ந்தார்.

தமது நண்பர்களுடன் சேர்ந்து தாம் தமிழ் படிப்பது தந்தைக்குத் தெரிந்தால் தடை ஏற்படக்கூடும் எனப் பாரதியார் அஞ்சியதால் தமது தந்தைக்குத் தெரியாமலேயே தாய்மொழிப் படிப்பைத் தொடர்ந்து வந்தார். தாய்மொழி படிக்கத் தடைவிதிக்கும் நிலை தமிழ்நாட்டில்.

தமிழ்மொழி மீது அளவில்லாத பற்றுக் கொண்டிருந்த பாரதியார் தமிழை வாழ்க என்று வாழ்த்துகிறார்.

*வாழ்க நிரந்தரம் வாழ்க தமிழ்மொழி*
*வாழிய வாழியவே*
*எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ்மொழி*
*என்றென்றும் வாழியவே*

பாரதிதாசன் பாரதியாரைப் பற்றிக் கூறுகையில் தமிழ் மொழியில் ஒரு பெரிய மாற்றத்தை, மறுமலர்ச்சியை ஏற்படுத்தியவர் பாரதியார் என்கிறார். மேலும் தமிழருக்கு ஒரு புதிய விழிப்புணர்வை உண்டாக்கியவர் என்றும் புகழ்கிறார்.

பாரதியாரின் பாடுபொருள் கற்றவர்களையும் கல்லாதவர் களையும் மகிழ்விக்கக்கூடியது. அவரின் சிந்தனையில் தாய்மையின் பெருமையும், பேராற்றலும், தாய்நாட்டுயர்வும், தண்டமிழின் தனிச்சிறப்பும் சுரந்தோடும்.

## நாட்டுப்பற்றோடு கூடிய மொழிப்பற்று

தாய்மொழிப் பற்றோடு நாட்டிற்குத் தொண்டுபுரியும் வகையினை வகுத்துத் தமது அறிவினாலும் அயராத அன்பினாலும் தமிழ்மொழிக்கும் தமிழ்நாட்டிற்கும் சிறந்த இலக்கியப் பணி புரிந்தவர் பாரதியார். தமிழ்மொழியை அமிழ்தம் என்று புகழ்கிறார்.

*அமிழ்தம் அமிழ்தம் என்று கூவுவோம் – நித்தம்*
*அனலைப் பணிந்து மலர் தூவுவோம்*
*தமிழிற் பழமறையைப் பாடுவோம் என்றுந்*
*தலைமை பெருமை புகழ் கூடுவோம்*

கவிஞர் கண்ணதாசன் பாரதியாரைப் பற்றிக் குறிப்பிடுகையில்,

*தமிழுக்கு மரியாதை இல்லாதபோது தமிழின்*
*உயர்வை வியந்து பாடினான்*

என்று கூறுகிறார்.

பாரதியார் ஒரு தேசியவாதி. ஒரு சமுதாயத்தின் வளர்ச்சிக்கு மொழி பல்வேறு வகைகளில் உதவி வருகின்றது. தேசீயம் என்ற கோட்பாட்டைத் தெளிவாக உணர்ந்து அதற்கேற்ப மொழிப் பயன்பாடு பற்றிய தம் கருத்துகளைத் தெளிவாகக் கூறியுள்ளார்.

தமிழ்நாட்டைச் 'செந்தமிழ் நாடு' என்று பாரதியார் கூறுவதன் மூலம் அவர் தமிழ்மீது கொண்டுள்ள பற்று புலனாகிறது. தமிழ் உயர வேண்டும்; தமிழ்மக்கள் அனைத்துச் செல்வங்களையும் பெற வேண்டும் என்று விரும்பினார்.

பாரதியார் பாரதநாட்டைப் பற்றியும், இந்தியா பற்றியும் கூறியுள்ள கருத்துகளைப் பார்க்கும்பொழுது பாரதியாரின் 'தேசியம்', 'நாடு' என்ற பரந்த எண்ணம் நமக்குப் புலனாகின்றது.

பாரதியாரின் கவிதை அச்சாகி அவரைக் கவிஞனாக உலகுக்கு அறிமுகப்படுத்திய இடம் மதுரை. 1904ஆம் ஆண்டு ஜூலை மாதம் 'விவேகபானு' என்ற மாத இதழில் அவரது கவிதை வெளியானது. அக்கவிதை பிரிவுத்துயரை எடுத்து விளக்கும் ஒரு காதல் கவிதை. பாடம் தலைப்பு தனிமை இரக்கம் என்பது. நேரிசையாசிரியப்பாவால் அமைந்தது. அப்பாடல்,

*குயிலனாய்! நின்னொடு கல்வியின் குலவி*
*பயில்வதிற் கழித்த பன்னாள் நினைந்துபின்*
*இன்றெனக்கிடையே எண்ணில் யோசனைப்படும்*
*குன்றமும் வனமும் கொழிதிரைப் புனலும்*
*மேவிடப் புரிந்த விதியையும் நினைத்தால்*
*பாவியென் நெஞ்சம் பகீரெனல் அரிதோ*
*கலங்கரை விளக்கொரு காவதம் கோடியே*
*மலங்குமோர் சிறிய மரக்கலம் போன்றேன்*
*முடம்படு தினங்காள்! முன்னர் யான்அவளுடன்*
*உடம்பொடும் உயிரென உற்றுவாழ் நாட்களில்*

*வளியெனப் பறந்தநீர் மற்றியான் எனாது*
*கிளிவினைப் பிரிந்துழிக் கிரியெனக் கிடக்கும்*
*செயலையென் இயம்புவல் சிவனே!*
*மயிலையிற் றென்றெவர் வகுப்பரங் கவட்கே*

தமிழ்மொழியைச் சூழ்ந்துள்ள துன்பம் யாவும் விலக வேண்டும். தொல்லையில்லாமல் தமிழ்மொழி சுடர்விட வேண்டும் என்று விரும்பினார் பாரதியார்.

தமிழகம் ஆன்றோர்களின் தேசம். இதை மதித்து வணங்கி வழிபட வேண்டும் என்று குழந்தைகளுக்கு அறிவுறுத்துகிறார்.

*தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற – எங்கள்*
*தாயென்று கும்பிடடி பாப்பா*
*அமிழ்தில் இனியதடி பாப்பா – நம்*
*ஆன்றோர்கள் தேசமடி பாப்பா*

என்று கூறுகிறார்.

தமிழ்மொழிக்குப் புதிய உயிரும் உணர்வும் ஊட்டியவர். பல்வேறு துறைகளிலும் இலக்கியப்பணி ஆற்றியவர்.

அறிவிலே தெளிவும் நெஞ்சிலே உறுதியும் வேண்டுமென் கிறார். தமிழை உயர்த்தும் கவிஞர் தமிழ்நாட்டில் இல்லை என்ற வசைமொழி இனித் தமிழகத்தில் இல்லை. அது என்னால் அழிந்தது என்று கூறிப் பெருமைப்படுகிறார்.

*புவியனைத்தும் போற்றிட வான்புகழ் படைத்துத்*
*தமிழ்மொழியைப் புகழிலேற்றும்*
*கவியரசர் தமிழ்நாட்டுக் கில்லை எனும்*
*வசை என்னால் கழிந்த தன்றே*

என்பது அவரது பாடல்.

**பாரதியின் தமிழ்ச் சிந்தனைகள்**

"இயன்றவரை தமிழே பேசுவேன் தமிழே எழுதுவேன் சிந்தனை செய்வது தமிழிலே செய்வேன்" என்று தமது மூச்சு, பேச்சு, செயல் அனைத்திலும் தமிழின் பெருமை பேசியுள்ளார். தாம் மட்டும் தமிழை எப்போதும் சிந்திப்பது மட்டுமல்லாமல் உலக மக்களையும் எப்போதும் தமிழைப் பற்றியே பேசுங்கள், சிந்தியுங்கள் என்று கூறுகிறார்.

பாரதியார் புதுவையில் வசித்து வந்தபோது அவருடைய சகோதரர் திரு. விசுவநாதன் ஆங்கிலத்தில் எழுதிய கடிதத்திற்குப் பாரதியார் பதில் எழுதுகையில்,

*எனக்கு இனிமேல் இங்கிலீஷில் காயிதம் எழுதாதே. நீ எழுதும் தமிழ் எத்தனை கொச்சையாக இருந்த போதிலும் அதைப் படிக்க நான் ஆவலுறுவேன்.*

என்று எழுதியுள்ளார்.

தன்னை நினைத்துக் கொண்டிருப்பதைவிடத் தமிழை நினைப்பதே தனக்கு மகிழ்ச்சி தரும் என்று தன் மனைவிக்கு எழுதிய கடிதத்தில் பாரதி கூறியுள்ளார்.

*தமது தந்தை காலமானபின் பாரதி காசி மாநகரம் சென்றார் அல்லவா? காசிவாசம் பாரதிக்கு அரசியல் உத்வேகத்தையும், உணர்ச்சிகளையும் ஊட்டியது. தேச சேவைக்கனல் அவர் உள்ளத்தில் மூண்டது. தேசிய சிந்தனையே அவர் சிந்தனையாயிற்று.*

என்று சீனி. விசுவநாதன் கூறுகிறார்.

தமிழ் வளர்ந்தால் தர்மம் உயரும் என்பதில் பாரதியார் உறுதியாக இருந்தார். தமிழ் வளர்ப்பில் முன்னணியில் இருந்த பாரதியார் பிறருக்கு வழிகாட்டியாகவும் இருந்தார்.

தமிழ்மொழிக்காக உயிர்தந்த அறிஞர் பெருமக்களுள் பாரதியாருக்குச் சிறப்பான இடம் உண்டு. தமிழ்மொழியை உலகம் முழுவதிலும் பரப்புவதிலும் பாரதியார் பேரார்வம் கொண்டிருந்தார்.

*எல்லோரும் தமிழுக்கு ஒருமுகமாகப் பாடுபட்டால் உலகம் புகழும்படி தமிழ் பரவாதா? யாரோ அத்வானம் என்று சொன்னார்கள் என்று வருந்துவதைவிட நாமும் நம் கையாலான உதவி செய்யலாம் என்று ரோஷத்தோடும் உற்சாகத்தோடும் செய்தால் எவ்வளவு நன்றா யிருக்கும். இங்கிலிஷ் படித்து அதிகாரம் செய்வதைவிட, தமிழைப்போற்றி அதிகப் படுத்துவது நல்லது. புதிய புதிய*

*நடைகளில் தொடருள்ள காவியங்களை விவரிப்பது கோவையான பாசுரங்களைப் பதம்பிரித்து அச்சிடுவது பெயர் போன பாஷைகளிலிருந்து நல்ல நல்ல கவிதைகளைப் பிரசுரிப்பது இயற்கை சாஸ்திரம், செயற்கை சாஸ்திரம், வான சாஸ்திரம், வனப்பொருள் சாஸ்திரம் இவைகளை மொழிபெயர்ப்பது இதனால் நன்மையுண்டாகும்.*

என்று கூறித் தமிழ் வளர்க்கப் பாடுபட்டவர் பாரதியார்.

பாரதியாரின் இதயம் தமிழ் இதயமாகும். தம்முடைய சிந்தனைகளையும் தமிழிலேயே செய்தார். தமிழ்மொழி தழைத்தோங்கவும் தமிழர்களின் வாழ்வு சிறக்கவும் அல்லும்பகலும் பாடுபட்டவர். தமிழர்கள் உலகத்தையே தலைமையேற்றுத் தாங்கக் கூடியவர்கள் என்று கருதியவர் பாரதியார். தமிழ்மீது பாரதியார் கொண்டிருந்த பற்றைப் பரலி சு. நெல்லையப்பருக்கு அவர் எழுதிய கடிதம் மூலம் அறியலாம். பாரதியார் கடிதம் எழுதியது பின்வருமாறு:

*புதுச்சேரி*
***19–07–1915***

*தம்பி தமிழ்நாடு வாழ்க என்றெழுது. தமிழ்நாட்டில் நோய்கள் தீர்க என்றெழுது. தமிழ்நாட்டில் வீதிதோறும் தமிழ்ப் பள்ளிக்கூடங்கள் மலிக என்றெழுது. அந்தத் தமிழ்ப் பள்ளிக்கூடங் களிலே நவீன கலைகளெல்லாம் பயிற்சி பெற்று வாழ்க என்றெழுது. தமிழ்நாட்டில் ஒரே ஜாதி தான் உண்டு. அதன்பெயர் தமிழ் ஜாதி. அது ஆர்ய ஜாதி என்ற குடும்பத்திலே தலைக் குழந்தை என்றெழுது. ஆணும் பெண்ணும் ஒருயிரின் இரண்டு தலைகள் என்றெழுது. அவை ஒன்றிலொன்று தாழ்வில்லை என்றெழுது. பெண்ணைத் தாழ்மை செய்தோன் கண்ணைக் குத்திக் கொண்டான் என்றெழுது. பெண்ணை அடைத்தவன் கண்ணை அடைத்தான் என்றெழுது.*

*தமிழ் – தமிழ் – தமிழ் என்று எப்போதும் தமிழை வளர்ப்பதே கடமையாகக் கொள்க. ஆனால் புதிய*

*புதிய செய்தி, புதிய புதிய யோசனை, புதிய புதிய உண்மை, புதிய புதிய இன்பம் தமிழில் ஏறிக்கொண்டே போக வேண்டும் தம்பி நான் ஏது செய்வேனடா? தமிழைவிட மற்றொரு பாஷை சுகமாக இருப்பதைப் பார்க்கும்போது எனக்கு வருத்த முண்டாகிறது. தமிழனை விட மற்றொரு ஜாதியான் அறிவிலும் வலிமையிலும் உயர்ந்திருப்பது எனக்கு ஸம்மதமில்லை தமிழச்சியைக் காட்டிலும் மற்றொரு ஜாதிக்காரி அழகாயிருப்பதைக் கண்டால் என்மனம் புண்படுகிறது.*

*தம்பி – உள்ளமே உலகம்! ஏறு! ஏறு! ஏறு! மேலே, மேலே, மேலே! நிற்கும் நிலையிலிருந்து கீழே விழாதபடி கயிறுகள் கட்டி வைத்துக் கொண்டு பிழைக்க முயற்சி பண்ணும் பழங்காலத்து மூடர்களைக் கண்டு குடல் குலுங்கச் சிரி. உனக்குச் சிறகுகள் தோன்றுக. பறந்து போ.*

*சி. சுப்பிரமணிய பாரதி*

**பாரதியாரின் உறுதிமொழிகள்**

*இயன்றவரை தமிழே பேசுவேன். தமிழே எழுதுவேன். சிந்தனை செய்வது தமிழிலே செய்வேன். எப்போதும் பராசக்தி... முழு உலகின் முதற்பொருள் அதனையே தியானஞ் செய்து கொண்டிருக்க முயல்வேன். அதனைக் குறித்தே ஓயாமல் எழுதிக் கொண்டிருக்க முயல்வேன்*

என்பன பாரதியாரின் உறுதிமொழிகள்.

**தமிழ்மொழிப் பயன்பாடு**

*யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்*
*இனிதாவது எங்கும் காணோம்*

*சேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம்*
*தமிழ் முழக்கம் செழிக்கச் செய்வீர்*

என்று பாரதியார் தமிழ்மொழியின் சிறப்பைக் கூறுவதோடு ஒவ்வொரு துறையிலும் தமிழ்மொழியின் பயன்பாடு சிறப்பாக

அமையும் வகையில் பிறநாட்டு நல்லறிஞர்களின் சாத்திரங்களைத் தமிழ்மொழியில் மொழிபெயர்த்திட வேண்டும் என்றும் கூறுகின்றார். மேலும் எழுதுகின்ற கருத்துகளும் பேசுகின்ற பேச்சுகளும் எளிய மக்களுக்கும் சென்று சேரவேண்டும். எல்லா மக்களும் அவற்றை எளிதில் புரிந்துகொள்ளக்கூடிய நடையாகவும் அமையவேண்டும் என்று பாரதி கூறுகின்றார். எனவே தான் 'பேசுவது போல் எழுதுவது உத்தமம்' என்பார்.

தமிழ் மக்களின் வலிமையைப் பெருக்குவதற்காகவே தாம் உயிரோடு இருப்பதாகப் பாரதியார் கூறுகிறார்.

> *பெண்ணை அடிமை என்று கருதாதே. முற்காலத்துத் தமிழர் மனைவியை 'வாழ்க்கைத் துணை' என்றார். ஆத்மாவும் சக்தியும் ஒன்று. ஆணும் பெண்ணும் சமம்.*
>
> *தமிழ் ஜனங்களுள் சக்தி மேன்மேலும் பெருகச் செய்ய வேண்டும் என்பது நமது நோக்கம். இந்த நோக்கத்தை நிறைவேற்றும் பொருட்டாகவே நாம் உயிர் தரித்திருக்கிறோம்*

என்றவர் பாரதியார்.

மக்களுக்குப் புரியக்கூடிய வகையில் கவிஞர்கள் கவிதை எழுத வேண்டும் என்று வலியுறுத்தினார்.

> *காலம் மாற மாறப் பாஷை மாறிக்கொண்டு போகிறது. பழைய பதங்கள் மாறிப் புதிய புதங்கள் உண்டாகின்றன. புலவர் அந்தந்தக் காலத்து ஜனங்களுக்குத் தெளிவாகத் தெரியக்கூடிய பதங்களையே வழங்க வேண்டும். அருமையான உள்ளக் காட்சிகளை எளிமைகொண்ட நடையிலே எழுதுவது நல்லது. ஆனால் சென்ற சில நூற்றாண்டுகளாகப் புலவர்களும் சாமியார்களும் சேர்ந்து வெகு சாதாரண விஷயங்களை அசாதாரண அலௌகீக அந்தகார நடையில் எழுதுவதுதான் உயர்ந்த கல்வித்திறமை என்று தீர்மானம் செய்து கொண்டார்கள்*

என்று எழுதுகிறார் பாரதியார்.

பாரதியார் தமிழ்மொழி மீது அளவிலாத பற்றுக் கொண்டிருந்தார். தமிழ்மொழியை வளர்க்கப் பிறதுறை அறிவும் தேவை. பாரதியாரின் தமிழ்மொழிப் பற்றுக் குறித்து முனைவர் எஸ். ஆரோக்கியநாதன் அவர்கள்,

*பாவேந்தர் பாரதிதாசன் தமிழாய்ந்த ஒருவன்தான் தமிழ்நாட்டின் முதல்வராய் வருதல் வேண்டுமெனச் சொல்லித் தமிழ்ப் பள்ளிக்கூடங்களை அரசே ஏற்படுத்தி நிர்வகிக்க வேண்டுமென்கிறார். பாரதி பிறமொழிக் கலைகளும் பிறதுறை அறிவும் தமிழுக்குப் புதிய வரவாக இருக்கவேண்டும் என்பதில் தீவிரமான கருத்தைக் கொண்டிருந்தார். இந்தப் புதிய வரவுகளால் தேக்கமடைந்துள்ள தமிழ்மொழி புதிய உத்வேகம் பெற்றுப் பல்வேறு துறைகளிலும் வளர்ச்சியடையும் எனப் பாரதி தீவிரமாக நம்பினார். பாரதியின் தமிழ் மொழிப் பற்றினைக் குறித்து மதிப்பிட முடியாது. ஆயினும் அவரது தேசிய நோக்கத்திற்குத் தமிழ்ப் பற்று ஒரு இயைபாக அல்லது இணைப்பாக அமைகின்றது என்றே கருத வேண்டும்.*

என்கிறார்.

### தமிழ் உயரப் பாரதி காட்டிய வழி

தமிழ்மொழி மீது பற்றுக்கொண்ட பாரதியார் தமிழ்மொழி உயர, உலகமெங்கும் தமிழ் பரவப் பல வழிகளைக் கூறியுள்ளார்.

*தமிழா பயப்படாதே ஊர்தோறும் தமிழ்ப்பள்ளிக் கூடங்கள் போட்டு ஐரோப்பிய சாஸ்திரங்களை எல்லாம் தமிழில் கற்றுக் கொடுக்க ஏற்பாடு செய்*

என்று பிறநாட்டுச் சாத்திரங்களையும் தமிழர்கள் தமிழ்மொழியில் கற்க வேண்டும் என்ற விருப்பத்தையும் கூறுகிறார்.

### தமிழ் வளர்க்கப் பாரதி கூறும் யோசனைகள்

*இங்கிலீஷ் படித்த வக்கீல்களும், இங்கிலீஷ் பள்ளிக் கூட வாத்தியார்களும் தனது நீதி ஸ்தலங்களையும், பள்ளிக்கூடங்களையும் விட்டு வெளியேறியவுடனே*

*இங்கிலீஷ் பேச்சை விட்டுத் தாம் தமிழர் என்பதை அறிந்து நடக்கவேண்டும்.... எங்கும் எப்போதும் இந்தப் 'பண்டிதர்கள்' இங்கிலீஷ் பேசும் வழக்கத்தை நிறுத்தினால் உடனே தேசம் மாறுதலடையக் கூடியவரை இவர்கள் தமிழில் எழுதக் கற்றுக்கொள்ள வேண்டும். படித்த மக்கள் தாய்மொழியான தமிழை அலட்சியம் செய்தல் கூடாது*

என்பதையும் அவர்கள் தமிழிலே பேசவும், எழுதவுமான பயிற்சியை மேற்கொள்ள வேண்டும் என்பதையும் பாரதி பெரிதும் விரும்பினார்.

ஆங்கிலம் படித்த வக்கீல்களும், ஆங்கிலப் பள்ளி ஆசிரியர்களும் ஆங்கிலத்தில் பேசும் வழக்கத்தை நிறுத்தி, தமிழில் பேசும் வழக்கத்தையும் எழுதும் வழக்கத்தையும் மேற்கொண்டால் உடனே தேசம் மாறுதல் அடையும் என்பது பாரதியின் சிந்தனையின் முதல்படி – ஆரம்பக் கட்ட முயற்சி என்றும் நாம் கொள்ளலாம்.

**பாரதியாரின் வேண்டுகோள்**

தமிழின் புகழ் மிக விரைவிலேயே உலகம் முழுவதிலும் பரவ வேண்டும் என்று கனவு கண்டார். அதில் உறுதியான நம்பிக்கையும் கொண்டிருந்தார்.

*இந்த நிமிஷம் தமிழ் ஜாதியின் அறிவு, கீர்த்தி வெளியுலகத்திலே பரவாமல் இருப்பதை நான் அறிவேன். போன நிமிஷம் தமிழ் ஜாதியின் அறிவொளி சற்றே மங்கியிருப்பதையும் நானறிவேன். போன நிமிஷம் போய்த் தொலைந்தது. இந்த நிமிஷம் ஸத்யமில்லை. நாளை வரப்போவது ஸத்யம்.*

*மிகவும் விரைவிலேயே தமிழின் ஒளி உலகம் முழுவதிலும் பரவாவிட்டால் என் பெயரை மாற்றி அழையுங்கள். அதுவரையில் இங்குப் பண்டிதர்களாக இருப்போர் தமக்குத் தமிழ்ச்சொல் நேரே வராவிட்டால் வாயை மூடிக்கொண்டு வெறுமே இருக்கவேண்டும். தமிழைப் பிறர் இழிவாகக் கருதும்படியான வார்த்தைகள் சொல்லாதிருக்க வேண்டும். இவ்வளவு தான் என்னுடைய வேண்டுகோள்*

என்று பாரதி 'தமிழ்' என்ற தலைப்பில் 3–4–1916 இல் 'சுதேசமித்திரனில்' எழுதிய எழுத்துகள் பாரதியின் உள்ளார்ந்த தமிழ் உணர்வைப் புலப்படுத்துகின்றன அன்றோ!

தமிழ்மொழி வளர்ச்சி பெறவேண்டுமானால் அம்மொழிக்கு இழைத்த பெருமை தேடிய அறிஞர்களுக்கெல்லாம் விழாக்கள் எடுத்துக் கொண்டாட வேண்டும் என்பதையும் பாரதி உணர்த்தியுள்ளார்.

> *. . . பூர்வீக மகான்களின் ஞாபகத்தைத் தீவிரமான பக்தியுடன் வளர்க்காத நாட்டில் புதிய மகான்கள் பிறக்க வழியில்லை. . .*
>
> *எதனை விரும்புகிறோமோ அது தோன்றுகிறது. எதை ஆதரிக்கிறோமோ அது வளர்ச்சி பெறுகிறது. பேணாத பண்டம் அழிந்து போகும். பழக்கத்தில் இல்லாத திறமை இழந்துவிடப்படும். அறிவுடை யோரையும் லோகோபகாரிகளையும் வீரரையும் கொண்டாடாத தேசத்தில் அறிவும் லோகோப காரமும் வீரமும் மங்கிப்போகும்.*

என்கிறார் பாரதியார். இதுவே பாரதியின் மொழிவழிச் சிந்தனையின் சிகரம் எனலாம்.

தாம் எழுதும் தமிழ்நடை அனைவருக்கும் புரியவேண்டும். படித்தவருக்கும் பாமரருக்கும் விளங்கவேண்டும் என்பதில் அக்கறை காட்டினார்.

> *தமிழ்நாட்டில் முழுதும் தமிழ்நடையை விட்டு இங்கிலீஷ் நடையில் தமிழை எழுதும் விநோதமான பழக்கம் நமது பத்திரிகை ஆசிரியர்களிடம் காணப்படுகிறது. முதலாவது நீ எழுதப்போகிற விஷயத்தை இங்கிலீஷ் தெரியாத ஒரு தமிழனிடம் சொல்லிக்காட்டு. அவனுக்கு நன்றாக விளங்குகிறதா? என்று பார்த்துக் கொண்டு பிறகு எழுது. அப்போதுதான் நீ எழுதுகின்ற எழுத்து தமிழ்நாட்டுக்குப் பயன்படும். இல்லாது போனால் நீயும் சிரமப்பட்டு மற்றவர்களுக்கும் பயனில்லாமற் போகிறது.*

என்று எழுதினார்.

இன்றோ மங்காத ஆங்கில மோகம்; அத்தோடு ஓசைப் படாமல் வளர்கின்ற இந்திமோகம் ஒருபுறம். இன்னொருபுறம் வாழ்க தமிழ் முழக்கம். இதற்கும் மத்தியில் தமிழ் வளர்வதென்னவோ உண்மைதான். பாரதி எதிர்ப்பார்த்த அளவிற்கு வளர்ச்சியில் வேகம் இல்லை. அறிவியல் வர்க்கத்தில் இன்னும் தமிழின் மீது உறுதியான நம்பிக்கை ஏற்படவில்லை.

எழுபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பே தமிழ்ச் சங்கங்கள் பற்றிப் பாரதி தெரிவித்த கருத்து:

> *'நவீன ஸயன்ஸ் பரிசோதனை களையும் மற்றுமுள்ள சாஸ்திர அற்புதங்களையும் தமிழர்களுக்குத் தமிழ் பாஷையிலேயே கற்பிக்கக் கூடிய பண்டிதர்களும் கருவிகளும் வேண்டும. தமிழ்பாஷை ஆராய்ச்சி மட்டிலும் செய்தாலும் போதாது. தமிழ்பாஷையே எல்லா வகையிலும் பெருமைப்படுத்தித் தமிழர்களின் மேற்படி சங்கம் ஒரு மூலஸ்தனமாக விளங்கு வதற்குரிய ஏற்பாடுகள் செய்யவேண்டும். ஆனால் இதுவெல்லாம் பணமில்லாமல் அணுவேனும் நடக்கமாட்டாது'*

என்று ஆதங்கப்பட்டுக் கொள்கிறார்.

இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பக் காலங்களில் தமிழ்நாட்டின் தமிழ்த் தெருவில் தமிழ் இல்லை என்ற அவலநிலை இருந்தது. அத்தமிழ்த் தெருவில் தமிழ்மொழி செழித்து வளம் பெருகுவதற்குத் தம் தமிழ்ப்பாட்டால் உழைத்தவர் பாரதியார்.

உலக அரங்கில் பிறருக்கு வழிகாட்டியாக இந்தியா விளங்க வேண்டும் என்று விரும்பிய பாரதியார், பழங்கதைகளைப் பேசித் தன் வாழ்நாட்களைக் கழித்துவரும் மக்களைக் கண்டு வருந்துகிறார்.

> *உலக அரங்கல் இந்தியா பெருமைபெற்று வழிகாட்டியாக விளங்கவேண்டும். அத்தகுதி நம் நாட்டிற்கு உண்டு. அதற்கு மக்கள் பழங்கதைகள் பேசுவதை விடுத்துப் பொறியியல் துறையில் முன்னேற வேண்டும்.*

என்கிறார்.

தமிழ்க்கவிதை எவ்வாறு அமையவேண்டும் என்பது குறித்துப் பாரதியார் பின்வருமாறு கூறுகிறார்.

*எதுகை, மோனைகளுக்காகச் சொல்லவந்த பொருளை மாற்றிச் சொல்லும் பண்டிதன் சரஸ்வதி கடாட்சத்தை இழந்துவிடுவான். யமகம், திரிபு முதலிய சித்திரக் கட்டுக்களை விரும்பிச் சொல்லுக்குத்தக்கபடி பொருளைத் திரித்துக் கொண்டுபோகும் கயிறு பின்னிப் புலவன் வாணியின் திருமேனியை நோகும்படி செய்கிறான். அவசியம் இல்லாத அடைமொழிகளைக் கோப்போன் அந்தத் தெய்வத்தின் மீது புழுதியைச் சொரிகிறான். உலகத்தாருக்குப் பொருள் விளங்காதபடி இலக்கியம் செய்வோன் அந்தச் சக்தியைக் கரித் துணியாலே மூடுகின்றான். இலக்கியத்திற்குத் தெளிவும் உண்மையும் உயிர் எனலாம். மேலும் ஒளிபொருந்தும்படி தெளிவு கொண்டதாகி தண்ணென்ற (குளிர்ந்த நடை யுடையதாகி) மேலோர் கவிதையைப் போலக் கிடந்தது கோதாவரி நதி என்று கம்பன் வர்ணனை செய்திதான். எனவே கவிதைகளில் ஒளி, தெளிவு, குளிர்ந்த நடை மூன்றும் இருக்க வேண்டுமென்பது கம்பனுடைய மதமாகும்.*

என்கிறார்.

**பாரதியாரின் விமர்சனம்**

அக்காலக் கவிஞர்கள் தங்கள் கவிதை நடையை வலுக்கட்டாயமாகக் கடின நடையாக மாற்றிக் கொண்டார்கள். தமிழ்மொழியில் இனிய எளிய சொற்கள் இருக்கையில் வலிந்து கடின சொற்களை உபயோகித்தனர். இவ்வழக்கத்தைப் பாரதியார் பெரிதும் சாடினார்.

*நமது கவிதையிலே ஆனந்தம் குறையத் தொடங்கிற்று. ருசி குறைந்தது. கரடுமுரடான கல்லும் முள்ளும் போன்ற பாதை நமது கவிஞர்களுக்கு நல்ல பாதையாகத் தோன்றலாயிற்று. கவிராயர் 'கண்' என்பதை 'சக்கு' என்று சொல்லத் தொடங்கினார்.*

*ரஸம் குறைந்தது சக்கை அதிகப்பட்டது. உண்மை குறைந்தது. பின்னல் திறமைகள் அதிகப்பட்டன.*

என்று விமர்சிக்கிறார்.

தமிழை வளர்க்கப் பெரும் ஆர்வம் கொண்ட பாரதியார் அதற்கென ஒரு சங்கத்தையும் தோற்றவித்தார். இந்தச் சங்கத்தின் மூலம் தமிழை வளர்க்க நினைத்திருந்தார்.

*தமிழ் வளர்ப்பு முயற்சிச் சங்கம் என்னும் அமைப்பினைப் புதுச்சேரியில் பாரதியார் முதல் உலகப்பெரும் போர்க்காலத்தில் தொடங்கினார். அறிவியல் மற்றும் சாத்திர நூல்கள் பிறமொழிக் காப்பியங்கள், உரைநடைகள் பற்றிய மொழி பெயர்ப்புகள், நாட்டுப்பற்று, மொழிப்பற்று பற்றிப் புதுமுறையில் கற்பிக்கும் நூல்கள் ஆகியவற்றை வெளியிடும் பெருந்திட்டத்தோடு தொடங்கப்பெற்ற இச்சங்கம் அரசினரின் அனுமதி கிடைக்காததால் அமைப்பு முறையோடு பாரதியார் பணியாற்ற இயலாமற் போய்விட்டது.*

என்கிறார்.

*ஆதிசிவன் பெற்றுவிட்டான் – என்னை*
*ஆரியமைந்தன் அகத்திய னென்றோர்*
*வேதியன் கண்டு மகிழ்ந்தே – நிறை*
*மேவும் இலக்கணஞ் செய்து கொடுத்தான்*

என்ற பாடலின் மூலம் மேலைநாட்டுக் கலைகள், இலக்கியங்களின் வளர்ச்சியைக் கண்ட பாரதியார் தமிழ்மொழியிலும் இயற்றல் வேண்டும் என்று தமிழ்த்தாயின் மூலமாக நமக்கு எடுத்துக் காட்டுகிறார்.

பாரதியார் கவிதைக்கு விளக்கம் கூறுகையில்,

*புனர்ஜென்மம் என்ற தலைப்பில் பாரதியார் எழுதிய கட்டுரையில் "நெடுங்காலத்துக்கு முன்னே எழுதப் பட்ட நூல்கள் அக்காலத்துப் பாறையைத் தழுவினவை. காலம் மாறமாறப் புதிய பதங்கள் உண்டாகின்றன.*

*புலவர் அந்தக் காலத்து ஜனங்களுக்குத் தெளிவாகத் தெரியக் கூடிய பதங்களையே வழங்க வேண்டும். அருமையான உள்ளக்காட்சிகளை எளிமை கொண்ட நடையிலே எழுதுவதுதான் நல்ல கவிதை*

என்கிறார்.

**பாரதியாரின் தமிழ்ப்பணிகள்**

தமிழ்மொழியை வளர்ப்பதைத் தனது கடமையாகக் கொண்ட பாரதியார் எங்கும் எப்போதும் தமிழ், தமிழ் என்றே முழங்கி வந்தார்.

பொதுமக்கள் தங்கள் தாய்மொழியில் பயிற்சி பெற வேண்டும் என்று விரும்பினர். படித்த அறிஞர்கள் தாய்மொழி மீது பற்றுக்கொள்ளத் தூண்டினார்.

தமிழ்மொழியை வளர்ப்பதே தனது முதல் பெரும்பணியாக மட்டுமல்லாமல் கடமையாகவும் கருதியவர். புத்தம் புதிய சிந்தனைகள் வளரவேண்டும் என்றும் விரும்பினார்.

தமிழை விட மற்றொரு மொழி சுகமாக இருப்பதைக் கண்டு பாரதி பொருமுகிறார்.

*தமிழ் – தமிழ் – தமிழ் என்று எப்போதும் தமிழை வளர்ப்பித்த கடமையாகக் கொள்க. ஆனால் புதிய புதிய செய்தி புதிய புதிய யோசனை புதிய புதிய உண்மை புதிய புதிய இன்பம் தமிழில் ஏறிக் கொண்டே போகவேண்டும். தமிழைவிடமற்றொரு பாஷை சுகமாக இருப்பதைப் பார்க்கும்போது எனக்கு வருத்த முண்டாகிறது.*

என்கிறார்.

**பாரதியின் தமிழ் முழக்கம்**

தமிழ்நாட்டின் பெருமையையும், சிறப்பையும் உணராமல் மக்கள் தங்கள் வாழ்க்கையை வீணாக்கி வருவதை உணர்ந்தார் பாரதியார்.

*தமிழர் தம் நாட்டின் வளமும் தம் மொழியின் பண்புமறியாது தம் வாழ்வைச் சிக்கலில் சிக்க வைத்தும், தமிழ்மொழியை உமிழ்மொழி யாக்கியும் மன்னராக வாழ்வதில் யாது பயன். இவ்வாறு பாரதியாரது கவியுள்ளம் தமிழரது ஆற்றலையும் தமிழ்மொழியின் செவ்வியையும் காக்கும்வண்ணம் வண்டமிழுக்குப் புதுப் பண்பும் புத்தணிகளும் தேடித் தரத் தமிழ்த் தாய் தன் புகழ்க் காலத்தை வென்று நிலைக்குமென ஊஞ்சிலிர்த்துப் புதியதோர் இன்முறுவல் பூத்தனள்*

என்று பாரதியை நினைத்துத் தமிழ்த்தாய் பூரித்ததாகச் சோமசுந்தரம் கூறுகிறார்.

**பாரதியாரின் நடைச்சுவை**

தமிழ் உரைநடை பாரதியாரால் இனிமை பெற்றது. தமிழின் இனிமை உலகுக்குத் தெரிந்ததில் பாரதியின் பங்கு கூடுதலானது. பாரதியார் பத்திரிக்கைகளில் பணியாற்றியபொழுது தமிழ்மொழி வளரப் பெரிதும் பாடுபட்டார். சுதேசமித்திரனில் வேலை பார்த்து வந்த காலத்தில் பாரதியார் மிகக் கடுமையாக உழைத்து வந்தார். பாலகங்காதர திலகர் ஆகியோரின் கட்டுரைகளைப் படித்து அவற்றை மொழிபெயர்த்துத் தமிழ்ப் பத்திரிக்கையில் அச்சேற்றினார். பாரதியாரின் உரைநடை வாயிலாகத் தமிழ் உரைநடை தெளிவும் இனிமையும் பெற்று வளரலாயிற்று. பாரதி தம்முடைய மொழி பெயர்ப்புகள் மூலம் தமிழ் உரைநடைக்குப் புதுமையை ஊட்டினார். எளிதில் புரியக் கூடிய இசையுடன் நிரம்பிய பல பாடல்களையும் எழுதி வெளியிட்டார்.

அன்றாட அரசியலைக் கண்காணித்து வந்தார். இதனால் அவருடைய தமிழ்நடையில் வீரச்சுவை நிரம்பி வழிந்தது. புலவர்களிடமும், பண்டிதர்களிடமும் மட்டுமே இருந்துவந்த தமிழ் மொழி பாமரர்களிடமும், குழந்தைகளிடமும் உலாவரச் செய்தவர் பாரதியார்.

*மக்களின் உணர்ச்சிகளையும், வேட்கைகளையும், வேதவாக்குகளையும், குறைகளையும், கோரிக்கை*

*களையும், தேவைகளையும், திட்டங்களையும் வெளிப்படுத்தி வளம் பெற்று வாழும் மொழியாகத் தமிழை வளர்த்த பெருமை பாரதியாரைச் சாரும்.*

**இன்தமிழ்க் கவிஞர் பாரதியார்**

இனிய எளிய கவிதைகள் இயற்றக்கூடிய திறமையை இயற்கையாகவே பெற்றவர் பாரதியார். 1903 ஆம் ஆண்டு 'செந்தமிழ்'ப் பத்திரிகைப் பதிப்புரையில்,

> *நம் தமிழ்மொழியின் ஈசுவர சம்பந்தமான பாடல்களும் காவியங்களும் புராணங்களும் பிறவும் நிரம்ப உண்டாயினும் நம்மவர்க்குத் தற்காலம் இன்றியமையாதது. வேண்டத்தக்கனவாகவும் தேசாபிமானத்தை உண்டாக்க வல்லனவுமான உயிர்கவிகள் கிடைத்ததில் இயற்கையில் இனிய கவிகள் பாடவல்ல பாரதியார் தம் சக்தியை இத்தகைய புதுவழியில் திருப்பி உபயோகப்படுத்தி யிருப்பது நம்மவர்க்கு ஒரு நல்ல வழியைக் கற்பிக்கின்றது*

என்று எழுதிப் பாரதியைப் பெருமைப்படுத்துகிறது.

அடுக்குச் சொற்களுடன் கவிதை எழுதும் கவிஞர்களின் போக்கைக் கண்டித்த பாரதியாருடன் சூரியநாராயண சாஸ்திரியாரும் சேர்ந்து பாடுபட்டார்.

> *இந்த நூற்றாண்டில் வி.கோ. சூரியநாராயண சாஸ்திரியார் என்னும் புலவரும் கவிஞர் பாரதியாரும் சொல்லணிகளையும் சித்திரக் கவிகளையும் பழித்தும் ஒதுக்கியும் நல்வழி காட்டிய பின் இன்று தமிழிலக்கியத்தில் அவற்றிற்கு இடம் இல்லாமல் போயிற்று.*

என்று டாக்டர் மு.வ. குறிப்பிடுகிறார்.

> *கவிதைகளில் தூய தமிழைப் பெரும்பாலும் கையாண்ட பாரதியாரும் உரைநடையில்*

*கட்டுரைகள் எழுதியபோது (பேச்சுத்தமிழ்) அந்த நடையையே கையாண்டார்.*

**புதுநூல் படைக்கும் முயற்சி**

பாரதியின் மொழி வளர்ச்சிச் சிந்தனையில் மொழிபெயர்ப்புக்கு முக்கிய இடம் கொடுத்தார். மொழிபெயர்ப்பின் மூலம் புதுப்புதுச் சிந்தனைகள் தமிழில் வரவேண்டும். வளம்பெறவேண்டும் என்று கனவு கண்டார்.

*பிறநாட்டு நல்லறிஞர்*
*சாத்திரங்கள் தமிழ்மொழியில்*
*பெயர்த்தல் வேண்டும்*

*இறவாத புகழுடைய*
*புதுநூல்கள் தமிழ்மொழியில்*
*இயற்றல் வேண்டும்*

என்பது அவர் பாடல்.

மொழிபெயர்ப்பு நூல்களும், பல புதிய தமிழ் நூல்களும் தமிழில் வெளிவர வேண்டும் என்று கூறும் பாரதியாரின் ஆர்வமும் ஆசையும் இந்தப் பாடல் மூலம் நமக்குப் புலப்படுகின்றன.

'இறவாத புகழுடைய புதுநூல்கள்' என்கிறார். இன்றைய காலக்கட்டத்தில் இறவாத நூல்களின் எண்ணிக்கையை நினைத்தால் உலகம் புகழும் பெருமை கொண்ட நூல்கள் எதுவுமே இல்லை என்றே கூறலாம்.

எனவே புதிய இலக்கியம் படைக்க நாம் நமது முயற்சியைக் கையாள வேண்டும்.

உலகக் கவனத்தை ஈர்க்கும் நூல் ஒன்றாவது தமிழ் மொழியில் தோன்றவேண்டும். முடியாது என்பது இவ்வுலகில் எதுவும் இல்லை. தமிழில் எதுவும் செய்ய இயலும் என்று கூறித் தமிழ்மொழியின் சிறப்பையும் அதை வளப்படுத்தும் வழிமுறை களையும் கூறியவர் பாரதியார்.

பத்திரிகைகள் பயன்படுத்திய ஆங்கில வார்த்தைகளைக் கண்ட பாரதியார் மிகவும் வருந்துகிறார். 'தமிழ்நாட்டின் விழிப்பு'

என்ற கட்டுரையிலே 'பத்திரிகைகளின் நிலை' குறித்து அவர் எழுதுகிறார்.

*எனக்கு நாலைந்து முக்கியமான தமிழ்ப் பத்திரிகைகள் வருகின்றன. அவற்றுள் ஒன்று வாரப்பத்திரிகை. அது பழுத்த தேசியக் கட்சியைச் சேர்ந்தது. ஆனால் தக்க பயிற்சியில்லாதவர்களால் நடத்தப்படுவது. பத்திரிகையில் ஒவ்வொரு வியாசத்துக்கும் தமிழ்மகுடத்துக்கு மேலே இங்கிலீஷ் மகுட மொன்றும் கூட்டியிருக்கிறது.*

*ருஷ்யாவின் நிலைமை – The Situation in Russia.*

*தாய்ப்பாஷையின் மூலமாகக் கல்வி பயிற்றல்– The Vernaculars as Media of instruction.*

*ஆகா நான் மாற்றி எழுதுகிறேன். தமிழை முதலாவது போட்டு இங்கிலீஷை பின்னே போட்டேன். அந்தப் பத்திரிகைகளில் அப்படி யில்லை. இங்கிலீஷை முன்னே போட்டு, தமிழைக் கீழே போட்டிருக்கிறது. 'அமெரிக்க ஸ்திரி' பார்த்தாயா? என்னைத் தெரியாமலே என் கை முதலாவது தமிழ்வார்த்தை எழுதுகிறது.*

*American woman - அமெரிக்க ஸ்திரி*

*Our Matadhipatis - நமது மடாதிபதிகள்*

என்று எழுதியிருக்கிறது.

சமகாலப் பத்திரிகையாளர்கள் மொழியைப் பயன்படுத்திய விதம் குறித்துப் பாரதி இவ்வாறு புலம்புகிறார்.

தாய்மொழியான தமிழ்மொழி ஒன்றுதான் தமிழ்மக்களின் நல்வாழ்வைத் திறக்கும் திறவுகோல் என்று போதித்தார். தங்கள் நல்வாழ்வை இழந்து தமிழக மக்கள் அடிமையுற்று இன்றைய அவர்களின் நிலைமையைத் தமது கவிதை மூலமாகவே மக்களுக்கு உணர்த்திய பெரும் கவிஞர் பாரதியார்.

நமது மக்களும், நாடும் நல்வழி அடைய வேண்டுமென்றால் தமிழ்மொழியை வளர்க்க வேண்டும் என்கிறார்.

*யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்*
*வள்ளுவர்போல், இளங்கோ வைப்போல்*
*பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை*
*உண்மை வெறும் புகழ்ச்சியில்லை!*
*ஊமையராய்ச் செவிடர்களாய்க் குருடர்களாய்*
*வாழ்கின்றோம் ஒரு சொற் கேளீர்*
*சேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம்*
*தமிழ் முழக்கம் செழிக்கச் செய்வீர்*

தற்காலத் தமிழ் இலக்கியத்தில் ஒன்றான தமிழ்க் கவிதையை வலிமையுறச் செய்து சிறந்த கவிதைகளை உருவாக்கியவர் பாரதியார்.

**தமிழ் எழுத்துக்கள்**

தமிழில் இல்லாத ஒலிகளைப் புலப்படுத்திக் காட்டும் பொருட்டு ஆங்கில எழுத்துகளைத் துணையாக அமைக்கும் பரிசோதனையில் பாரதியார் ஈடுபட்டுள்ளார்.

எடுத்துக்காட்டுகள்:

***1. மிஸ்டர் ஆர்தர் (g)க்ரி (f)வித்ஸ்***
***2. மிஸ்டர் பா(f)ஸட்***
***3. மிஸ்டர் ஸிஞி(g)கிய்யோம்***
***4. வெஸ்ட் (f)பாலியா***

இவையெல்லாம் பாரதியார் பயன்படுத்திய ஆங்கில எழுத்துகளாகும்.

பாரதியாரை முன்னோடியாக வைத்து இன்று பல கவிஞர்கள் தோன்றியுள்ளார்.

பாரதியார் தமிழின்மீது பற்றுக் கொண்டவர். மொழிவெறி பிடித்தவர் அல்லர். தமிழ்நாட்டில் தமிழ்மொழி சிறப்பதுபோல அவரவர் நாட்டில் அவரவர் தாய்மொழி சிறக்க விரும்பினார்.

*தமிழ்நாட்டில் தமிழ் சிறந்திடும். பிற தேசம் முழுவதும் எப்போதும் போலவே வடமொழி வாழ்க. இன்னும் நாம் பாரத தேசத்தின் ஐக்கியத்தைப் பரிபூரணமாகச் செய்யுமாறு நாடு முழுவதிலும் வடமொழிப் பயிற்சி மேலும் மேலும் ஓங்குக.*

> *எனினும் தமிழ்நாட்டில் தமிழ் மொழி தலைமை பெற்றுத் தழைத்திடுக.*

என்று பாரதியார் கருத்துரைக்கிறார்.

இன்றைய நிலையில் பல கல்வி நிலைய இயக்குநர்களும் தமிழைப் பாடமொழியாக வைக்க வேண்டுமென வலியுறுத்தி வருகின்றனர். பாரதியின் மொழிச்சிந்தனை பின்வரும் கூற்றில் ஒலிப்பதை அறியலாம்.

> *மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் சார்பில் நடைபெற்ற 15வது அனைத்திந்திய மொழியியலார் மாநாட்டில் ஆங்கிலம் மற்றும் வெளிநாட்டு மொழி களுடைய மத்திய நிறுவனத்தின் இயக்குநர் டாக்டர் எஸ்.கே. வர்மா அவர்கள் மெல்ல மெல்ல ஆனால் உறுதியாகக் கல்வித் துறையில் எல்லா நிலை களிலும் தாய்மொழியே பாடமொழியாக இருக்க வேண்டிய இன்றியமையாமையை வலியுறுத்துகிறார்.*

தமிழில் சில எழுத்துகளை மாற்றி எழுத்துச் சீராக்கம் செய்து மொழியை விசாலமாக்க விரும்பினார் பாரதியார்.

> *பிரெஞ்சு இங்கிலீசு முதலிய ஐரோப்பிய பாஷை களிலும் ஹிந்தி முதலிய நமது நாட்டுப் பாஷை களிலும் உயிருள்ள பாஷைகளிலே வளர்வன எல்லாவற்றிலும் உச்சரிப்புத் திருத்தத்தைக் கருதிப் பழைய எழுத்துக்களில் சில அடையாளங்கள் சேர்த்துச் சௌகர்யப் படுத்திக் கொள்கிறார்கள். இந்த எளிய வழியை அனுசரித்து நமது தாய்மொழி விசாலமடைய வேண்டுமென்பதே என்னுடைய விருப்பம்.*

என்கிறார் பாரதியார்.

## இந்திய மொழிகளைப் பற்றிப் பாரதியார்

பல்வேறுபட்ட கலாச்சாரம், பண்பாடு, மொழி, பழக்க வழக்கம், வாழ்க்கை முறைகளைக் கொண்டது இந்தியநாடு. நாகரிகத்தில் சிறந்து விளங்கும் மக்களையும் நாகரிகமென்றால்

என்னவென்றே தெரியாத பழங்குடி மக்களையும் கொண்டது இந்திய நாடு. இந்நாட்டில் தமிழும் வடமொழியும் புராதன மொழிகள், பண்பட்ட மொழிகள்.

இத்தகைய தமிழ், வடமொழி ஆகிய இருமொழிகளையும் ஆதரித்த கொள்கை உடையவர் பாரதியார் என்று கூறலாம்.

நாட்டு மொழியாக (Local language) தமிழையும் தொடர்பு மொழியாக இந்தியையும், பாரத கண்டத்தின் ஆட்சி மொழியாக (Official Language) சமசுகிருதத்தையும் பயன்படுத்த வேண்டுமென விரும்புகிறார். இந்தி சமசுகிருதத்தின் திரிபுப் பேச்சு வழக்கு எனக் கொண்டால் பாரதி தமிழ், சமசுகிருதம் எனும் இருமொழிக் கொள்கையை வலியுறுத்துவதாகக் கொள்ளலாம்.

நாலைந்து மொழிகளில் பழக்கமுள்ள பாரதியார் தமிழ்மொழி போல வலிமையும், திறமையும் உள்ளத்தொடர்பும் உடைய மொழி இல்லை என்கிறார்.

**பிறமொழியின் பயன் குறித்துப் பாரதியார்**

தம்மை எல்லாத் துறையிலும் சிறப்பித்துக் கொள்ள வேண்டும் என்பதே பாரதியாரின் குறிக்கோள். பிற இனமக்களுடனும் பிற நாட்டுடனும் ஒன்றுபட்ட பொதுவுடைமை இந்தியாவை உருவாக்க வேண்டும் என்பதே பாரதியார் கருதியது.

பாரதியாரின் உறுதியான கருத்து 'சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே' என்பதுதான்.

*செந்தமிழ் நாடெனும் போதினிலே – இன்பத்*
*தேன்வந்து பாயுது காதினிலே – எங்கள்*
*தந்தையர் நாடென்ற பேச்சினிலே – ஒரு*
*சக்தி பிறக்குது மூச்சினிலே*

என்று கூறித் தமிழ்நாட்டின் மீது மக்களுக்குப் பற்று ஏற்படுத்து கிறார். மேலும்,

*தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்று – எங்கள்*
*தாயென்று கும்பிடடி பாப்பா*

என்று கூறிக் குழந்தைகளுக்குப் பாலோடு சேர்த்துக் கரைத்துத் தாய்நாட்டுப் பற்றையும் ஊட்டுகிறார்.

**தேசியவாதி**

பாரதியார் ஒரு தேசியவாதி. பிராமண குலத்தில் பிறந்து வேதப் பயிற்சி பெற்றுத் தேர்ந்த ஓர் அறிஞர் இவர். வடமாநிலங் களுக்குச் சென்று வடமொழியைக் கற்றவர். பாரதியார் தமிழ்மொழியை வாழ்த்திப் பாடக் காரணம் என்ன என்பதற்குச் சாலை இளந்திரையன் அவர்கள்,

> *யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல் இனிதாவது எங்கும் காணோம் எனும் பாரதியின் பாட்டு அவனது சகபாடிகள் எழுதி வைத்த தமிழ்த்துதி போல் ஒப்புக்கு அகவலாக அமைந்தது. அதனால்தான் தமிழ்ப்பெருமை பாடியது தமிழர்கள் பாரத ஒற்றுமைக்கு எதிராகக் குரல் எழுப்பாமல் தடுப்பதற்கே என்று கருதவும் இடமிருக்கிறது*

என்கிறார். பாரதியாரின் உள்ளத்தில் தேசிய உணர்வு உள்ளார்ந்து இருந்தது.

> *மொழிப்பற்று இல்லாத நாட்டுப்பற்றோ, நாட்டுப்பற்று இல்லாத மொழிப்பற்றோ, உண்மையான தேசீயமாகக் கொள்ளப்பட மாட்டாது என்பது பாரதியின் உள்ளக்கிடக்கை*

என்று 'மணிஜி', 'பாரதியார் இதயம்' எனும் நூலில் குறிப்பிடுவதாகக் கலைச்செல்வி அன்பரசு கூறுகிறார். பாப்பாக்களுக்குத் தமிழ்மொழியின் பெருமையை உணர்த்தும் பாரதியார் தமிழ்மொழியில் தான் கல்வி கற்க வேண்டும் என்று அறிவுறுத்துகிறார்.

> *ஆ... ஆ... எல்லாச் சொற்களைக் காட்டிலும் தமிழ்ச் சொல் அல்லவா உயர்ந்திருக்கிறது. இதன் பெருமையை என்னவென்று புகழ்வது! பாப்பா! சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே என்று கூறித் தொடங்கினார். பல மொழிச் சொற்களில் உயர்ந்தது தமிழ்ச்சொல் என்றார்... (தமிழை) தொழுது படிக்க வேண்டும். இணக்கமில்லாப் படிப்பு வாயில் நுழையாது என்பார்கள். அதனால் வணங்கிப் படிக்க வேண்டும்.*

என்று பாப்பாக்களுக்கு அறிவுறுத்துகிறார்.

பாரதியார் நினைத்தது போலவே கவிதைதான் படைத்ததால் அவரது எழுத்துக்களை அனைவராலும் புரிந்துகொள்ள முடிந்தது.

தமிழ்மொழியின் பெருமையினை மட்டும் கூறவில்லை. பிற மொழியின் பெருமையையும் ஆங்காங்கே கூறுகிறார். பிறநாட்டு இலக்கியங்களின், அறிஞர்களின் கண்டுபிடிப்புகள் ஆகியவற்றை அறிந்துகொள்ளத் தமிழ்மொழி உதவுகின்றது.

பாரதியார் இந்தி, சமசுகிருதம், வங்காளம், பிரெஞ்சு, ஆங்கிலம் போன்ற மொழிகளை அறிந்திருந்தார். அதனால் அந்தந்த, நாட்டின் ஒருமைப்பாட்டினையும் மொழியின் சிறப்பினையும் அவரால் பகுத்தறிய முடிந்தது.

**பாரதியாரின் பிறமொழிப் பயன்பாடு**

பாரதியார் தமிழ்மொழி மீது பற்றுக் கொண்டவர் என்றாலும் அக்கால வழக்கத்திற்கு ஏற்றபடி வடமொழிச் சொற்களைப் பெரும்பாலும் கையாண்டுள்ளார்.

'பேசுவது போலவே எழுதுவது உத்தமம்' என்ற வழக்கத்திற்கு ஏற்ப எழுதிய பாரதியார் தமிழ், வடமொழிச் சொற்கள் கிடைக்காதபோது ஆங்கிலச் சொற்களைக் கையாண்டுள்ளார்.

பாரதியார் கையாண்ட வடமொழிச் சொற்களாவன:

1. *ஸ – ஸம்ஹாரமூர்த்தி, ஸம்ஸ்கிருதம், தேஜஸ்*
2. *ஷ – ஸ்பஷ்டம், விஷம், கஷ்டம், ஷஷ்டி*
3. *ஹ – ஹேது, இஹலோகம், ஹைஜம்*
4. *ஜ – ஜடம், ஜாதி, ஜீவனம், ஜன்மம்*
5. *க்ஷ – நக்ஷத்திரம், க்ஷத்திரியர், பிரத்யக்ஷம்*

இவை பாரதியார் பயன்படுத்திய வடமொழிச் சொற்கள். தமிழில் மொழி முதல் இறுதி என்ற நிலையில் இடம்பெறும் சொற்பான்மை வடமொழியில் இல்லை. ஆனால் பாரதியார் பெரும்பாலும் இவ்வகையான வடமொழிச் சொற்களையே கையாண்டுள்ளார்.

**ஆங்கிலச் சொற்கள்**

வாக்கியங்களில் எப்பொழுதெல்லாம் உபயோகிக்கலாம் என்பது பற்றிக் கூறுகையில்,

*தமிழ் வடமொழிச் சொற்கள் கிடைக்காதபோது ஆங்கிலச் சொற்கள் உபயோகப்படுத்தப்படலாம். ஆனால் வெறும் சொற்களை மட்டுமே பயன்படுத்த வேண்டும். செயல், குணம் இவற்றிற்கு ஆங்கிலச் சொற்களைப் பயன்படுத்துதல் கூடாது*

என்கிறார்.

கலைச்சொற்களைக் கையாளும்பொழுது இந்தச் செயல் குணம் என்பது பொருந்திவிடும் தொடர் அல்லது வாக்கியம் தாய்மொழியாக அமைய வேண்டும் என்று விரும்புகிறார். இது மாறிப் பழமொழியாக அமைந்தால் மொழித்திறன் குறைந்துவிடும் என்று கருதினார்.

| | | |
|---|---|---|
| *அமெண்ட்மெண்ட்* | *ஆர்ட்* | *கவர்ன்மெண்ட்* |
| *காலேஜ்* | *ஹைகோர்ட்* | *கௌன்ஸிலர்* |
| *சோஷலிஸ்ட்* | *ஜட்ஜ்* | *ட்ரஸ்டி* |
| *பிரஸிடெண்ட்* | *பிஷப்* | *போலீஸ்* |
| *மாஜிஸ்ட்ரேட்* | *மீட்டிங்* | *யூனிவர்ஸிட்டி* |

போன்ற ஆங்கிலச் சொற்களை மொழிபெயர்க்காமல் அப்படியே எழுதினார்.

**அராபியச் சொற்கள்**

பாரதியார் பலமொழிகளிலும் வல்லவர். அராபியச் சொற்களும் அவர் நடையில் உள்ளன. இன்றைய சூழ்நிலையில் தமிழுடன் ஆங்கிலம் கலந்து உரையாடுவது எத்தனை பழக்கமாகி உள்ளதோ அந்த அளவிற்கு அன்றைய சூழ்நிலையில் பாரதியாரின் நடையில் வடமொழிச் சொற்கள் இடம்பெற்றுள்ளன.

| | | | |
|---|---|---|---|
| *இனாம்* | *குஷால்* | *ஜப்தி* | *ஜவாப்* |
| *ஜமீன்தார்* | *ரசீது* | *இஸ்திரி* | *ஹம்பக்* |
| *ஜமாய்த்தல்* | *ஸலாம்* | *மாமூல்* | *ரஸ்தா* |
| *குமாஸ்தா* | *சம்பளம்* | *ஜன்னல்* | *தஸ்தாவேஜ்* |
| *மிராசுதார்* | *வசூல்* | | |

போன்ற அராபியச் சொற்களைப் பாரதியார் தமது உரைநடையில் கலந்து எழுதியுள்ளார்.

**புதிய சொற்கள்**

இதுமட்டுமன்றிப் பாரதியார் தமது திறமையைப் புதுச் சொற்கள் படைத்துக் காட்டுவதன்மூலம் நிரூபித்துள்ளார். பாரதியார் படைத்த புதுச்சொற்களாவன:

| | | |
|---|---|---|
| *அக்கினிக்குஞ்சு* | *அடிமைச்சி* | *அரசாணி* |
| *ஒட்டைகள்(ஒட்டகம்)* | *தர்க்கி* | *தாழ்ச்சி* |
| *தொண்டச்சி* | *புரட்சி* | *பூத்தி* |
| *பொதுவுடைமை* | *வினைச்சி* | *வீரை* |

இச்சொற்கள் அனைத்தும் பாரதியாரால் படைக்கப்பட்ட புதிய சொற்கள் ஆகும்.

**தமிழாக்கம்**

வேற்றுமொழிச் சொற்களைத் தமிழாக்கம் செய்துள்ளார்.

*சைபீரியா கிவேரி ஜாகப் யாக்கோபு*

அக்காலங்களில் தமிழ்மொழியின் தோற்றமே ஒரு கலப்பு மொழி போலக் காட்சி தந்தது.

> *தொல்காப்பியனார் காலத்தில் வடமொழியும், பௌத்த சமண சமயங்களின் வழிப் பாலி மொழியும், பல்லவர் காலத்தில் மீண்டும் வட மொழியும் இது பக்தி இலக்கியக் காலம் வரையிலும் இசுலாமியர்களின் படையெடுப்பால் அராபி, பார்சி முதலிய மொழிகளும் ஐரோப்பியரின் வருகையால் போர்க்கீசிய மொழியும் பிரெஞ்சு மொழியும் ஆங்கில மொழியும் 'கலந்து' தமிழ் கலப்புமொழியாகவே காட்சி தந்தது.*

தமிழ்மொழியுடன் பிறமொழி கலந்ததற்குக் காரணம் தமிழருக்குப் பிற நாட்டினருடன் ஏற்பட்ட பண்பாட்டுத் தொடர்பு, வாணிகம், அந்நியர் ஆட்சி, பிறசமயத் தொடர்பு, மொழிபெயர்ப்பு நூல்கள் போன்றவற்றைக் குறிப்பிடலாம். இவற்றால்தான் பிறமொழிகள் தமிழ்மொழியுடன் கலந்தன.

சில இடங்களில் பாரதியார் சொல்லுக்குச் சொல் விளக்கம் தந்துள்ளார்.

எ.கா.: உச்சரி / சொல்

*'உச்சரி' என்பதை உத் – சரி என்று பிரித்தால் மேலே (உயர்ந்த படியில் நட) என்று பொருள்படுகிறது. சொல்லும்போது மேல்நிலையில் நின்று சொல்க.*

*'கை' என்பதற்குத் தெலுங்கில் செய் என்று பெயர் க ச மாறுதல் இயல்பு. 'கை' என்ற சொல்லுக்கே 'செய்' என்று பொருள் தொழில் செய்யாமல் இருக்கும் கையை நெருப்பிலே வை. கரியாவது கிடைக்கும் என்றர்த்தம்.*

*காக்கை – ஒரு பறவையின் பெயர். காக்கா என்றால் காப்பாற்றுதல் என்று பொருள்.*

*வருஷம் என்பறால் மழை. ஆண்டு என்றும் பொருள்படும்.*

*திருப்பதி என்பது ஒரு க்ஷேத்திரத்திற்கும் சௌபாக்ய நிலைமைக்கும் பெயர்.*

*அன்னம் என்றால் உணவு. அன்னம் என்றால் வஸ்து.*

*சத்தியத்துக்கும் ப்ராஹ்மத்துக்கும் அன்னம் என்று பெயர்.*

*ப்ராமணர் 'ஸத்யத்தவர்த்தேநபரிஞ்சாமி' என்று சொல்லி அன்னத்தை ஜலத்தில் சுற்றுகிறார்கள். அங்கு ஸத்தியம் என்பது உண்மைக்கும் நேர்மைக்கும் பெயர். நேர்மையானது தைரியம் நாம் அறிந்தது. உண்மைப்படி நடக்கும் துணிவு.*

*அன்னம் – அமிர்தம்*

இவ்வாறெல்லாம் சொற்களுக்கும் புதுவிளக்கம் தருகிறார் பாரதியார்.

பாரதியாருக்குப் பிரெஞ்சு மொழியில் நல்ல பயிற்சி உண்டு. உச்சரிப்பு ஒலிகளையும் வாசகர்கள் உணருமாறு எழுதியுள்ளார்.

1. ப்ரதெய் (Bretehi)
2. போல் ரிஷார் (Paul Richard)

**பாரதியின் மொழிபெயர்ப்பு**

மொழிபெயர்ப்பில் தமிழ்நடையே இருக்கவேண்டுமென்று கூறுகின்றார். பிறநாட்டு அறிஞர்களின் சாத்திரங்களையும், நல்ல நல்ல கருத்துகளையும் தமிழ்மொழியில் மொழிபெயர்த்து மக்களுக்கு அளிக்க விரும்பினார். தான் நினைத்தது போலவே செய்தும் காட்டினார்.

பாரதியாரின் மொழிபெயர்ப்பு சொல்லுக்குச் சொல் வாக்கியத்திற்கு வாக்கியம் என்ற வகையில் இல்லாமல் மூல நூலாசிரியரின் கருத்தை மட்டும் புரிந்துகொண்டு அந்தக் கருத்தை மட்டும் வழங்கியுள்ளார். மக்களுக்கு எளிதில் புரியும் வகையில் பாரதியாரின் மொழிபெயர்ப்பு அமைந்துள்ளது.

*ஒளிர்மணி நீரும், நயம்படு கனிகளும்*
*குளிர்பூந் தென்றலும் கொழுபொழிற் பசுமையும்*
*வாய்ந்து நன்கிலகுவை வாழிய அன்னை*

ஜாதீய கீதத்தை இரண்டாவது முறையாக எளிய சொற்களால் பாரதி மொழிபெயர்த்துள்ளார்.

பாரதி தாகூரின் கட்டுரைகளை ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கிய போது

*மேலே ரவீந்தர் வார்த்தைகளை அப்படியே மொழிபெயர்க்கவில்லை. ஸாராம்சத்தை எனது பாஷையிலே எழுதியிருக்கிறேன்*

என்று குறிப்பிட்டுள்ளார். எளிய முறையில் மொழிபெயர்ப்பதில் பாரதியார் மிகவும் தேர்ந்தவராக விளங்கினார், (Partial Tamilisation) செய்தும் இருக்கிறார்.

| வடமொழிச் சொல் | | | | தமிழ் ஒட்டு |
|---|---|---|---|---|
| அதிகாரி | + | கள் | = | அதிகாரிகள் |
| அனுஸரி | + | தல் | = | அனுஸரித்தல் |
| பிரஜை | + | கள் | = | பிரஜைகள் |
| ஸ்நேக | + | அம் | = | ஸ்நேகம் |
| ஸ்வப்நா | + | அம் | = | ஸ்வப்நம் |
| மனுஷ்ய | + | அன் | = | மனுஷன் |
| வர்த்தமான | + | கள் | = | வர்த்தமானங்கள் |

| ஆங்கிலச் சொல் | | | | தமிழ் ஒட்டு |
|---|---|---|---|---|
| சர்ச் | + | கள் | = | சர்ச்சுகள் |
| ஜுரி | + | கள் | = | ஜுரிகள் |
| **ஆங்கிலச் சொல்** | | | | **உகரம்** |
| கவர்ன்மென்ட் | + | உ | = | கவர்ன்மென்ட்டு |
| கான்பரன்ஸ் | + | உ | = | கான்பரன்சு |
| கோர்ட் | + | உ | = | கோர்ட்டு |
| போலீஸ் | + | உ | = | போலீசு |
| **பெர்சோ அராபிக் சொல்** | | | | **தமிழ் ஒட்டு** |
| குமாஸ்தா | + | கள் | = | குமாஸ்தாக்கள் |
| தஸ்தாவேஜு | + | கள் | = | தஸ்தாவேஜுகள் |

| தமிழ்ச்சொல் | | | | வடமொழிச்சொல் |
|---|---|---|---|---|
| உயிர் | + | நாதம் | = | உயிர்நாதம் |
| காம | + | திரவியம் | = | காமதிரவியம் |
| சாற்றிடும் | + | கீர்த்தி | = | சாற்றிடுங்கீர்த்தி |
| தங்கள் | + | பதி | = | தங்கள்பதி |
| பொய்மை | + | சூத்திரம் | = | பொய்மைசூத்திரம் |
| **தமிழ்ச்சொல்** | | **வடமொழிச் சொல்** | | **தமிழ்ச்சொல்** |
| கலை | + | சோதிகள் | = | கலைசோதிகள் |
| பூத்த | + | சோதிவதனம் | = | பூத்தசோதிவதனம் |
| **வடமொழிச் சொல்** | | | | **தமிழ்ச்சொல்** |
| அமிர்தம் | + | பொய்கை | = | அமிர்தப்பொய்கை |
| சகி | + | பெண்கள் | = | சகிப்பெண்கள் |
| சோதி | + | மணி | = | சோதிமணி |
| சோதி | + | மான் | = | சோதிமான் |
| ஜடம் | + | பொருள் | = | ஜடப்பொருள் |
| பரம் | + | நிலை | = | பரநிலை |

போன்ற சொற்களை ஓரளவு தமிழாக்கம் செய்து தம் படைப்புகளில் பாரதியார் பயன்படுத்தியுள்ளார்.

வேற்றுமொழிச் சொற்களை எவ்வாறு தமிழ்மொழியமைப்பிற் கேற்றவாறு ஒலிபெயர்த்து, ஓரளவு தமிழாக்கம் செய்து எழுதுகின்றாரோ அதுபோன்றே வேற்றுமொழிச் சொற்களுக்கு நிகரான தமிழ்ச் சொற்களை மொழிபெயர்த்து எழுதவில்லை. ஒன்றிரண்டு சொற்களே அவ்வாறு காணப்படுகின்றன.

**எ.கா.1. ஆங்கிலம் – தமிழ்**

| | |
|---|---|
| Photo | - நிழல்படம் |
| Cycle | - ஈருருவண்டி |
| Parallel Bars | - சமக்கட்டைகள் |
| Horizontal Bars | - ஒற்றைக்கட்டைகள் |
| Physics | - இயற்கை நூல் |
| Common sense | - பிழைபடாத அறிவு |
| Our Mathadipatics | - நமது மடாதிபதிகள் |
| **2. ஆங்கிலம்** | **- சமஸ்கிருதம்** |
| The Vernacular as Media of Instruction | - தாய்பாஷையின் மூலமாகக் கல்வி பயிற்றல் |
| Orescograph | - வழித்திதர்சிந் |
| American woman | - அமெரக்க ஸ்திரீ |
| **3. சமஸ்கிருதம்** | **- தமிழ்** |
| Nirvana | - முற்றுந்துறந்த முக்தி |
| தாவர சாஸ்திரம் | - செடி நூல் |

போன்ற சொற்களுக்கு மொழிபெயர்ப்புத் தந்துள்ளார்.

**மொழிபெயர்ப்பு ஆர்வம்**

பாரதியாருக்கு மொழிபெயர்ப்புக் கலையில் மிகுந்த ஆர்வமிருந்தது. ரவீந்திரநாத் தாகூரிடம் பாரதியாருக்கு மிகுந்த ஈடுபாடு இருந்ததால் 1908–1918 ஆண்டில் வெளிவந்த 'மாடர்ன் ரெவ்யூ' என்ற கல்கத்தா பத்திரிகையில் வெளியான தாகூர் சிறுகதைகளையெல்லாம் உடனுக்குடன் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டார்.

தமிழக வாசகர்களுக்கு இதுவே முதல் சிறுகதை அறிமுகம் என்றும் கூறலாம்.

தவிர, தாமே சிறுகதைகளைப் படைத்தார். 'அறிய ஒரு பங்கு', 'பூலோக ரம்பை கதை' முதலான கதைகளை இயற்றியுள்ளார். நவதந்திரக் கதைகள், கதைக்கொத்து என்பன அவருடைய கதைகளின் தொகுப்பாக விளங்குகின்றன.

**தமிழாக்கம்**

பாரதியார் வடமொழிச் சொற்களைக் கையாண்ட போதிலும் அவற்றைத் தமிழ்மொழிக்கேற்ப ஒலிபெயர்ப்பு செய்துள்ளார்.

| *எ.கா.* | *உபந்யாஸ* | *ஜீவிய* | *மனுஷ்ய* | *ஸ்தல* |
|---|---|---|---|---|
| | *கவர்ன்மென்ட்* | *தஸ்தாவேஜ்* | *மித்ரா* | *ஸ்திர* |
| | *கான்பரன்ஸ்* | *திக்விஜய* | *ரஹஸ்ய* | *பிரதிஷ்டா* |
| | *சங்கற்ப* | *திவ்ய* | *ஜ்வர* | *ப்ரத்யக்ஷ* |

இச்சொற்களை ஒலிபெயர்த்துக் கையாண்டுள்ளார். மேலும் பல சொற்களை மொழிபெயர்த்துக் கையாண்டுள்ளார்.

தொடக்கக் காலத்தில் ஆங்கிலச் சொற்கள் எழுதி வந்த பாரதியார் விரைவில் தமிழ் எழுத்துக்களை உருவாக்கி அளிப்பதில் ஆர்வம் கொண்டு செயல்பட்டார்.

பாரதியாரின் சிந்தனை மிகத் தெளிவானது. யதார்த்தத்தில் ஊறித் திளைத்தவர் பாரதியார். கலைச்சொல்லாக்கங்கள் பற்றி அவர் கூறுகையில்,

> *தமிழ்ச் சொற்கள் அகப்படாவிட்டால் ஸமச்கிருத பதங்களை வழங்கலாம். பதார்த்தங்களுக்கு மட்டுமேயன்றிக் கிரியைகளுக்கும் அவஸ்தை களுக்கும் (நிலைமைகளுக்கும்) தமிழ் ஸம்ஸ்கிருத மொழிகளையே வழங்குதல் பொருந்தும். அந்த இரண்டு பாஷைகளில் பெயர்கள் அகப்படாத இடத்தில் இங்கிலீஷ் பதங்களையே உபயோகப் படுத்தலாம். ஆனால் குணங்கள், செயல்கள், நிலைமைகள் இவற்றுக்கு இங்கிலீஷ் பதங்களை ஒருபோதும் வழங்கக் கூடாது. பதார்த்தங்களின் பெயர்களை மாத்திரமே இங்கிலீஷில் சொல்லலாம். வேறு வகையால் உணர்த்த இயலாவிடின்*

என்கிறார். மேலும் மிகச் சிறிய சொற்களுக்கும் தமிழாக்கம் செய்ய முயற்சித்துள்ளார். 'மெம்பர்' என்ற சொல்லுடன் கடும் போட்டியிட்டுள்ளார்.

> *'அவயவி' சரியான வார்த்தையில்லை. 'அங்கத்தான்' கட்டி வராது. 'சபிகன்' சரியான பதந்தான். ஆனால் பொது ஜனங்களுக்குத் தெரியாது. 'உறுப்பாளி' ஏதெல்லாமோ நினைத்தேன். ஒன்றும் மனதிற்குப் பொருந்தவில்லை. என்ன செய்வேன்? கடைசியாக 'மெம்பர்' என்று எழுதிவிட்டேன்*

என்று கூறுகிறார்.

மேலும், 'வோட்' என்ற சொல்லுக்குரிய தமிழ்ச் சொல்லைப் பாரதியார் உருவாக்கியுள்ளார்.

> *'Vote' என்ற சொல்லை முதலில் 'வோட்' என்றே பாரதியார் குறிக்கின்றார். ஆயினும் 1906இல் இவ்வாறு எழுதிய பாரதியார், 1919இல் வெளியிட்ட காங்கிரஸ் வரலாறாகிய 'பாரத ஜனசபை' என்ற நூலில் 'வாக்குச்சீட்டு' என இன்று பழக்கத்தில் வந்துள்ள புதுச்சொல்லை உருவாக்கி அளித்தார். வாக்காளர்களைச் 'சீட்டாளர்கள்' என்றும் குறித்துள்ளார். இதே காலகட்டத்தில் வெளிவந்த 'சுதேசமித்திரன்' கட்டுரைகளிலும் 'வாக்குச்சீட்டு' என்ற சொல்லைப் பாரதியார் அறிமுகம் செய்துள்ளார் (12, ஜூன் 1917). இதற்கு முன்னதாக வெளிவந்த (19, ஜனவரி 1917) 'பழைய உலகம்' என்ற கட்டுரையிலேயே இச்சொல் கையாளப் பட்டுள்ளது.*

பாரதியார் புதிய சொற்கள் பலவற்றைப் படைத்துள்ளார். தமிழக மக்களுக்குப் புரியவேண்டும், நாட்டுப்பற்று, மொழிப்பற்று ஏற்பட வேண்டும் என்பதற்குப் பாரதியார் வேற்றுமொழிச் சொற்களை மாற்றித் தமிழில் மொழிபெயர்த்துப் புதிய சொற்களையே படைத்துள்ளார்.

ப்ரேரணை (Proposal), ராஜ விசாரணைக் கூட்டம் (Royal Commission), காப்புப்படை (Volunteers), வருமானத்தீர்வை (Income

Tax), வரவு செலவுத் திட்ட அறிக்கை (Budget), சுற்றுத்தரவு (Circular), துணைப்பொதுப் பரிசோதகர் (Sub-Inspector), அனுமதி உத்தரவு (License), இனாம் சம்பளம் (Pension), கணம் (Committee), உபசார கணம் (Host Committee), அரசிறை (Revenue), சிறையோலை (Warrant), பதிற்றாண்டு (Decade) என்று மிகச் சிறப்பாகப் புதிய சொற்களைப் படைத்துள்ளார்.

மேலும் 'புரட்சி', 'பொதுவுடைமை' என்ற இரண்டு சொற்களையும் படைத்தவர் பாரதியார் என்ற கருத்து நிலவுகின்றது.

தமிழில் அதற்கு முன் இந்தச் சொல் இல்லை என்று கூறும் பாரதிப்பித்தன், பாரத சமுதாயப் பாடலில், முப்பது கோடி ஜனங்களின் சங்கம் முழுமைக்கும் பொதுவுடைமை என்ற வரியில் உள்ள 'பொதுவுடைமை' என்ற சொல்லைக் குறிக்கின்றார்.

1920ஆம் ஆண்டு டிசம்பர் 3ஆம் நாள் எழுதிய கட்டுரையொன்றில்

*'கம்யூனிஸம்' என்றும் போல்ஷ்லிஸம் என்றும் பலவாறாகக் கூறப்படும் நவீன ருஷ்யக் குடியரசின் ஸமூஹ உடமைக் கொள்கை'*

எனப் பாரதியார் குறிப்பதால் அதுவரை 'பொது உடைமை' என்ற சொல் உருவாகவில்லை எனக் கருதலாம்.

1921ஆம் ஆண்டு மார்ச் 15ஆம் நாள் 'காலக் கண்ணாடி' என்ற கட்டுரையில்தான் இச்சொல் முதன்முதலாகக் காணப்படு கிறது.

*எனவே பொதுவுடைமைக் கக்ஷி என்ற காட்டுத்தீ ஐரோப்பா என்ற மனுஷ்ய வனத்தில் ருஷ்யா முழுவதையும் சூழ்ந்து கொண்டதுமன்றி மற்ற இடங்களில் அங்கங்கே திடீர் திடீரென்று வெடித்துத் தழல் வீசி வருவது காண்கிறோம்.*

இக்குறிப்பால் பாரதியார் 1921ஆம் ஆண்டில் 'கம்யூனிஸம்' என்ற சொல்லைப் 'பொதுவுடைமை' என்று குறித்தார் என்பதையும், அதே கருத்தில்தான் அதே ஆண்டில் 'முப்பது கோடி ஜனங்களின்

சங்கம் முழுமைக்கும் பொதுவுடைமை' எனக் கவிதையிலும் எழுதி இருக்கவேண்டும் என்பதையும் ஊகிக்கலாம்.

'புரட்சி' என்ற சொல்லின் கதை வேறு. 'புரள்' என்ற பகுதியையும் 'சி' என்ற தொழிற்பெயர் விகுதியையும் இணைத்துத் தான் பாரதி 'புரட்சி' என்ற சொல்லை உருவாக்கினார் என்பார் புதுமைப்பித்தன். 'வினைச்சி', 'இகழ்ச்சி', 'தாழ்ச்சி' என்ற சொற்களைப் படைத்தது போல இச்சொல்லும் அமைக்கப்பட்டது என்ற அவர் கருத்து சரியானது. இதுபோலவே 'உயர்ச்சி', 'இகழ்ச்சி' என்ற சொற்களையும் பாரதி இலக்கியத்தில் பார்க்க முடியும்.

இச்சொல்லையும் கூடப் 'புதிய ருஷ்யா' என்னும் கவிதையில் (1917இல் எழுதப்பட்டதாகக் கருதப்படுவது மார்ச் புரட்சியையா நவம்பர் புரட்சியையா இப்பாடல் குறிக்கிறது என்ற விவாதம் இருக்கட்டும்) வரும் 'யுகப்புரட்சி' என்ற சொல்லாக்கத்தோடு இணைப்பது வழக்கமாக உள்ளது. ஆனால் 'புரட்சி' என்ற சொல்லை 1910இல் வெளியானதாகக் கருதப்படும் 'ஆறில் ஒரு பங்கு' குறுநாவலில் காணமுடிகிறது. அதற்கும் முன்னதாக 1906இல் பாரதியாரின் 'இந்தியா' இதழில் உருஷ்ய நாட்டைப் பற்றிய குறிப்புகளில் இச்சொல்லைப் பார்க்க முடிகிறது.

*அ. ருஷ்யாவில் மறுபடியும் ராஜாங்கப் புரட்சிச் சின்னங்கள் (30–06–1906).*

*ஆ. சென்ற வாரம் ருஷ்யாவைப் பற்றி எழுதிய குறிப்பிலே அத்தேசமானது ஒரு பெரிய ராஜாங்கப் புரட்சி ஏற்படும் (நிலையிலுள்ளது) என்று தெரிவித்தோம் (7–7–1906).*

*இ. ருஷ்யாவிலே ராஜாங்கப் புரட்சி (1–9–1906).*

**பாரதியாரின் மொழிபெயர்ப்புக் கொள்கை**

மொழிபெயர்ப்பு என்பது ஒரு மொழியிலிருந்து மற்றொரு மொழிக்கு மாற்றுவது ஆகும். அவ்வாறு மாற்றும்பொழுது மூலநூலின் கருத்துகள் சிறிதும் மாறுபடாமல் இருக்கவேண்டும்.

பாரதியார் பல மொழிகளிலிருந்தும் மொழிபெயர்ப்புச் செய்துள்ளார். சமசுகிருதம், வங்காளம், பிரெஞ்சு, ஆங்கிலம்

போன்ற மொழிகளிலுள்ள கவிதைகள், வசனங்கள் (உரைநடை), வேதங்கள் முதலியவற்றைத் தமிழில் மொழிபெயர்த்துள்ளார். பாரதியாரின் மொழிபெயர்ப்புக்களாவன:

1. ஸ்ரீமத் பகவத் கீதை (முதல் பதிப்பு) 1924–25
2. பதஞ்சலி யோக சூத்திரம் (முதலாவது ஸமாதி பாகத்தின் 50 சூத்திரங்கள் முதல் பதிப்பு 1928)
3. வேத ரிஷிகளின் கவிதை (வேதங்களிலிருந்து தெரிந் தெடுத்த சில பாகங்கள், இரண்டாம் பதிப்பு 1937)
4. தாகூர் சிறுகதைகள் (முதல் பதிப்பு 1937) இதில் இடம்பெற்றுள்ள இரண்டு கதைகள் 1937இல் வெளிவந்தன
5. மகாகவி ஸர் ரவீந்திரநாத் தாகூர் அருளிய பஞ்ச விலாசங்கள் (முதல் பதிப்பு, 1918)
6. நாட்டுக்கல்வி (ரவீந்திரரின் ஆங்கிலக் கவிதையின் மொழிபெயர்ப்பு)
7. ஜாதீய கீதம் 1 & 2 (பங்கிம் சந்திர சட்டோபாத்தியாயரின் வந்தே மாதரம் மொழிபெயர்ப்பு)
8. கற்பனையூர் (John Scurr என்பவரின் The Town of Lets pretend)
9. ரத்னமாலை (பலதேசத்து ஞானிகளின் வசனங்களை 'ஆர்ய' பத்திரிகையில் போல் நிஷார் (Paul Richard) என்ற பிரான்ஸ் நாட்டு வித்வான் தொகுத்தெழுதிவரும் கோவையிலிருந்து காளிதாசன் மொழிபெயர்த்தது
10. விக்டர் ஹியூகோ என்ற பிரெஞ்சு ஞானியின் வசனங்கள் தாகூரின் ஐரோப்பிய சங்கீதம், இந்து சங்கீதம் பற்றிய கருத்துரை, ஸ்ரீ விஜயகுமார ஸர்க்கார் 'கவி' பற்றி எழுதிய கட்டுரை, உயோரே நோகுச்சி என்ற ஜப்பானியப் புலவர் மார்கன் ரிவியூவில் கூப்பானியக் கவிதை பற்றி எழுதிய கருத்து ஆகியவற்றையும் தமிழாக்கியுள்ளார். 'பெண் விடுதலை' சீனக் கவிதை ஒன்றின் மொழிபெயர்ப்பு
11. கடல் (அரவிந்தர் ஆங்கிலத்தில் எழுதிய நவீன பரிசோதனை மார்டன் ரிவியூ பத்திரிகையில் வெளியிட்ட

கவிதையின் தமிழாக்கம்), இந்தியாவின் அமைப்பு – திருமதி மாட் ரால்ஸ்டன் ஷர்மன் எழுதிய ஆங்கிலக் கவிதையின் மொழிபெயர்ப்பு, போர்க்கோலம் பூணுவீர் (லா மார்ஸெலேஸ் என்ற பிரெஞ்சு தேசிய கீதத்தின் தமிழாக்கம்).

12. Agni and other poems and translations (1937)

**விளக்க மொழிபெயர்ப்பு**

பாரதியார் சூத்திரங்களை மொழிபெயர்க்கும்பொழுது நேரடியாக மொழிபெயர்த்து மேலும் அதனை விளக்கியும் விளக்கும் தருகிறார். எ.கா.

> *ப்ரத்யக்ஷம், அனுமரணம், ஆகமம் என்பவை ப்ரமாணங்களாம். வ்யா – ஐம்புலன்களால் நேரே அறிதல் ப்ரதியக்ஷப்ரமாணம் அல்லது காட்சியளவை எனப்படும். ஊஹத்தால் அறிவது அனுமானம். அனுபவத்தில் உண்மையென்று காட்டத்தக்கன வாகிய மேலோர் வாய்ச்சொல் ஆகமம் எனப்படும். மேலும் சில சூத்திரங்களில் ஒரே சொல்லிற்கு (for a single lexical items) விரிவான விளக்கமும் கொடுக்கப் பட்டுள்ளது. அச்சொல்லின் முழுமையான பொருளை மக்கள் புரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வமே இதற்குக் காரணம் எனலாம்.*

எ.கா.

> *விதர்க்கம், விசாரம், ஆனந்தம், அஸ்மிதை என்ற நிகழ்ச்சிகளையுடையது. 'ஸம்ப்ரக் ஞாதம்' என்ற ஸமாதி. வ்யா–விதர்க்கம் என்பது பொது ஆராய்ச்சி. விசாரம் ஸீஷ்ம வஸ்துக்களைப் பற்றிய ஆராய்ச்சி அஸ்மிதை என்பதே வெறுமே 'நான் இருக்கின்றேன்' என்ற உணர்ச்சி மாத்திரம் மிஞ்சி நிற்கும் நிலைமை.*
>
> *ஸமாதியே யோகியின் லக்ஷ்யம். சித்தத்தை அசைவின்றி ஒரே பொருளில் நிறுத்திவிடுதல் ஸமாதி எனப்படும். இந்த ஸமாதி இரண்டு*

*வகைப்படும். 'ஸம்ப்ரக்ஞாதம்', 'அஸம்ப்ரக் ஞாதம்' என 'ஸம்ப்ரக்ஞாதம்' உணர்வுட்பட்டது 'அஸம்ப்ரக்ஞாதம்' உணர்வைக் கடந்தது.*

*ஒரு பதார்த்தத்தை மற்றெல்லாம் பொருள் களினின்றும் பிரித்து மீட்டும் மீட்டும் அதிலேயே தியானம் செலுத்துவது விதர்க்க ஸமாதியின் லக்ஷணம்.*

*தியானம் செலுத்துவதற்குரிய விஷயங்கள் இரண்டு வகைப்படும். பிரகிருதியின் தத்துவங்கள் ஒருவகை மற்றொன்று புருஷன் (ஆத்மா) சேதனன் அறிவுடையவன்*

இவ்வாறு விரிவான விளக்கமளிக்கிறார்.

இவ்வாறு விளக்கமளிக்கையில் அதற்கு மேற்கோளும் அளித்து விளக்குகிறார்.

ஸமாதி பற்றிக் கூறுகையில் சுவாமி விவேகானந்தர் கூறிய ஸமாதி பற்றிய விளக்கத்தைக் கூறுகிறார்.

*இவ்விடத்தில் ஸ்வாமி விவேகானந்தர் பின்வருமாறு எழுதுகிறார். யோக சாஸ்திரத்தில் இந்த அம்சம் ஸாஸ்க்ய சாஸ்த்ரத்தை ஆதாரமாகவுடையது. அஹங்காரம், புத்தி, மனம் இவற்றுக்கெல்லாம் சித்தமே ஆதாரம். சித்த வஸ்துவிலிருந்தே இவையெல்லாம் பிறக்கின்றன.*

மொழிபெயர்த்துக் கூறும் இடங்களில் அவற்றைப் புரிய வைப்பதற்காகப் பலவிதங்களில் முயலுகின்றார்.

புரியாத சொற்களுக்கு விளக்கமளிக்கிறார். அவற்றிற்கு மேற்கோள் காட்டுகிறார். சில இடங்களில் மேற்கோள் பாடல்களும் தருகிறார். எ.கா.

*பெண்டு பிள்ளை துறந்துவிட்ட மாத்திரத் தாலேயே ஒருவன் முத்திக்குத் தகுதியுடைய வனாய் விடமாட்டான். இஃதே ஸ்ரீபகவான் கீதையில் உபதேசிக்கிற கொள்கை.*

*துறவிகளுக்குள்ளே பட்டினத்துப்பிள்ளை சிறந்தவரென்று தாயுமானவர் பாடியிருக்கிறார். அந்தப் பட்டினத்துப்பிள்ளை என்ன சொல்கிறார்.*

*அறந்தா னியற்றும் அவனிலுங் கோடி யதிகமில்லந்*
*துறந்தான் அவனிற் சதகோடி யுள்ளந் துறவுடையோன்*
*மறந்தாரைக் கற்றறிவோ டிருந்திரு வாதனையற்*
*றிறந்தான் பெருமையை என் சொல்வேன் கச்சி யேகம்பனே*

என்று கீதை விளக்கத்திற்குப் பட்டினத்தாரின் பாடலை மேற்கோளாகக் காட்டுகிறார்.

**சூத்திர விளக்கம்**

சூத்திரங்களை மொழிபெயர்த்து விளக்கம் கூறும் முன் அதற்கு முன்னுரை போலக் கூறி அதைப்பற்றியே முழுமையான தெளிவை நமக்கு ஏற்படுத்துகின்றார்.

'மருந்து' என்ற சூத்திரத்தை மொழிபெயர்க்கும் முன் பாரதியார் அதற்கு அளித்த விளக்கத்தை உதாரணமாகக் காணலாம்.

*மருந்துகளென்றால் புயற் காற்றடிக்கும் தேவர். இவர்கள் ரூத்திரன் மக்கள். ருத்ரன் அஞ்சத் தக்கவன் அவனுக்கு மூவுலகும் ஒடுங்கும்... இந்த வானவருடைய துணை வேண்டி கண்வரிஷி பின்வரும் மந்திரத்தை ஓதுகிறார்*

என்ற ரீதியில் மொழிபெயர்த்துச் செல்கிறார்.

இவைமட்டுமல்லாமல் சூத்திரங்களுக்கும் உட்தலைப்பு அமைத்தல் மற்றும் சூத்திரத்தில் வரும் சொற்களுக்கு ஏற்ப அடிக்குறிப்பில் விளக்கம் தந்தும் செல்கிறார்.

'வேத ரிஷிகள் கவிதை' என்ற தலைப்பில் ரிக்வேதங்களை மொழிபெயர்த்துள்ளார். வேதத்தின் கருத்துகளுக்கு ஏற்ப உட்தலைப்புகளை அமைத்துள்ளார்.

எ.கா.

*இந்திரனை ஹிரன்ய ஸ்தூபர் (தங்கத் தூண்) என்ற ரிஷி பாடியது. இந்திரனை மதுச் சந்தர் (தேனிசை) என்ற ரிஷி பாடியது*

மேலும் சூத்திரத்தில் வரும் சொற்களுக்கு ஏற்ப அடிக்குறிப்பு அமைத்து அடிக்குறிப்பில் விளக்கமும் அளிக்கிறார்.

**எ.கா. சூத்திரம்: 1**

*ஒளியில்லாத விடத்தே ஒளியினைச் செய்து,*
*வடிவமில்லாதவிடத்து வடிவத்தினை அமைத்து,*
*வீரனே நீ புலரிகளுடன் பிறந்துவிட்டாய்.*

புலரி என்ற சொல்லுக்கு அடிக்குறிப்பில் கீழ்க்கண்டவாறு விளக்கும் தருகிறார்.

புலரி – வைகறை, காலைச் செவ்வானம், இங்குப் 'புலரிகள்' என்பது ஞானோதயங்களை.

**சூத்திரம் : 2**

*இந்திரா, கோட்டைகளை உடைத்து, மறைவிடங்களிலே*
*வேள்வியைச் சுமந்து செல்லும் மருந்துகளுடனே*
*நீ ஒளிக்கதிர்களைச் சென்று மீட்டுக் கொடுத்தனை.*

*மருத்துகள் புயற்காற்றின் தேவர். இவர் நமது அறிவொளியை மூடும் இருளையெல்லாம் சாரப்புடைத்துக் குத்தியொழித்துவிட்டு வானமழையையும் ஒளியையும் பெறும்படி செய்பவர்*

என்ற விகிதத்தில் விளக்கிச் செல்கிறார்.

**பாரதியால் செம்மை பெற்ற தமிழ்**

தமிழ்மொழி பிறமொழி கலந்து கையாளப்பட்டதை வரலாறு மூலம் அறிகிறோம். தொல்காப்பியர் காலத்திலேயே வடமொழி கலக்கத் தொடங்கியது. ஆனால் பிற்காலத்தில் ஏற்பட்ட கலப்பினைப்போல் தொல்காப்பியர் காலத்தில் கலப்பு ஏற்படவில்லை. ஆனாலும் தொல்காப்பியர் காலத்தில் கலப்பு தொடங்கிவிட்டது எனலாம்.

சங்க காலப் பாடல்களில் வடசொல் கலப்பு சிறிதளவு தான் இருந்துள்ளது என்பதை அறிகிறோம். எனவே ஆங்கில ஆதிக்கத்தினால் தான் கலப்பு ஏற்பட்டது என்று கூறமுடியாது.

பாரதியார் 1908ஆம் ஆண்டு ஆங்கிலேயரின் அடக்குமுறை யிலிருந்து தப்பிப் புதுச்சேரியில் அடைக்கலம் புகுந்தார். அந்த நேரத்தில் தான் சக்திப்பாட்டு, வேதாந்தப்பாட்டு, குயில்பாட்டு, கண்ணன் பாட்டு, பாஞ்சாலி, சபதம், பகவத் கீதை, வேத ரிஷிகளின் கவிதை, பதஞ்சலி யோக சூத்திரம் முதலான நூல்களை இயற்றினார்.

மேலும் அரவிந்தர், 'கருமயோகி', 'தருமம்' என்ற பத்திரிகையில் எழுதிய கீதை, உபநிடதம், கலை, பண்பாடு, ஆத்மீகம் முதலியவற்றைத் தமிழ்ப்படுத்தித் தமிழ்ப்பத்திரிகையில் எழுதினார். இந்த முயற்சியின் பயன்தான் பாரதியாரின் பகவத் கீதை தமிழாக்கம் பொருள் மொழிபெயர்ப்பு.

பாரதியாரின் மொழிபெயர்ப்பு சொல்லுக்குச் சொல் என்ற முறையில் அமையாமல் தமிழ்மொழியமைப்பிற்கு ஏற்பப் பொருளை உணர்ந்து மொழிபெயர்ப்பதில் அமைந்தது. இதனைப் 'பாரதியும் அரவிந்தரும்' என்ற கட்டுரையில் கோதண்டராமன் (1973) என்பவர் சுட்டிக் காட்டுகிறார்.

'வேத ரிஷிகளின் கவிதை' என்னும் நூலில் காணப்படும் சில பகுதிகள் சிறப்பாக மதுச்சந்த ரிஷி இந்திரனைப் பாடிய பாடல்கள், அக்கினி தேவனைப் பாடிய பாடல்கள், அக்னி ஸ்தோமம் என்னும் தலைப்பின் கீழ்வரும் பாடல்கள் ஆகிய யாவும் ஸ்ரீஅரவிந்தர் ஆரியாவில் வெளியிட்டுள்ளனவற்றின் நேர் மொழிபெயர்ப்புப் போலவே காணப்படுகின்றன. அக்கினி விஷயமாக ரிஷிகள் எழுதியுள்ள கவிதையைப் பற்றி ஸ்ரீஅரவிந்தர் அக்கினித் துதிகளுக்கு முன்னுரையாக எழுதியுள்ள ஒரு பகுதியை மேற்கோள் காட்டுகின்றார். பதஞ்சலி யோக ஸூத்ரங்கள் என்பதிலும் ஸூத்ரங்களை அப்படியே மொழிபெயர்ப்புச் செய்துள்ளார்.

**பகவத்கீதை**

எ.கா. *ஞானக்நிஸ் ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதே*
*ஞானத் தீ எல்லாவினைகளையும் சாம்பராக்குகிறது.*
*ஸம்சயாத்மா விநயச்யதி*
*ஐயமுடையோன் அழிவான்*

**ரிக்வேதம்**

எ.கா. **மருந்தைக் கண்வரிஷி பாடியது:**

1. *பகைவரைக் கடித்துண்பீர்! உமக்கு வானத்தில் பகை யில்லை. மண்ணிலுமில்லை. விரிவுடைய ஆற்றல் நுமக்கேயாம் ருத்ரரே! அதனை யாரும் மீறலாமா?*

2. *புள்ளி மான்களைத் தேர்களில் பூட்டினீர். சிவப்புமான் தலைவனாக இருக்கிறது. உமது வரவை மண்மக்களும் உற்றுக் கேட்டார். மனிதர் நடுங்கினர்.*

இவ்வாறு வேத ரிஷிகள் கவிதையில் மொழிபெயர்த்துள்ளார். சூத்திரங்களை அப்படியே நேர் மொழிபெயர்ப்புச் செய்துள்ளதற்குக் காரணம் வேதங்கள் தேவமொழி அல்லது தேவ பாஷை என்று கருதப்படுவதனாலும் அவற்றை வேறுமாதிரி மொழிபெயர்த்தால் தவறுகள் நேரக்கூடும் என்ற எண்ணத்தினாலும் தான் என்று சொல்ல வேண்டும்.

பாரதியார் ஒரு பெருங்கவிஞர் மட்டுமின்றித் தமிழ் உரைநடை வளர்ச்சிக்கு அவர் செய்த தொண்டு மகத்தானது. உரைநடை வளரத் தொடங்கிய காலத்திலேயே அதன் எதிர்கால நிலைமையைக் கருத்தில் கொண்டு சிறந்த உரைநடையை அமைத்துக் கொள்ளவேண்டும் என அவர் விரும்பினார்.

பாரதியாரின் படைப்பாற்றல் கவிதை கட்டுரையோடு நின்றுவிடவில்லை. உரைநடையிலேயே கதையிலக்கியத்தையும் படைத்துள்ளார். அவளுடைய கதையின் கரு அக்காலப் பழக்கத்திலிருந்து அவர் காலம் வரை அனைத்தையும் அலசி, சிறப்பான கதைகளை வழங்கியிருக்கிறார்.

நாடு, பொருளாதாரம், கல்வி, பெண், மக்கள், குழந்தைகள், விடுதலை, கலைகள், சமூகம் முதலிய பல பொருட்களைப் பற்றிய கட்டுரைகளையும் பாரதியார் இந்த அடிப்படையிலேயே மிக எளிமையாக எழுதினார்.

பாரதியாரின் சிறுகதை அமைப்பு தற்காலத்திற்குப் பொருத்தமற்றது என்றாலும் அவரின் சிறுகதை நடை ஒரு புதிய இலக்கியம் என்றும் அத்தகைய புதிய இலக்கிய வகை தோன்றப் பாரதியார் வழி செய்துள்ளார் என்றும் கொள்ளலாம்.

தமிழையும் தமிழர்களையும் வளப்படுத்தத் தமக்குத் தெரிந்தவற்றைச் செய்யப் பாரதியார் என்றும் தயங்கியதில்லை. தமிழைத் தாழ்த்தியவர்களையோ, ஆங்கில மோகம் பிடித்து அலைந்தவர்களையோ பாரதியார் என்றும் ஆதரிக்கவில்லை.

'எல்லாப் பொருளும் இவர்பால் உள' என்று பழைய பண்டிதர் பான்மையில் 'அகழியில் விழுந்த முதலைக்கு அதுவே வைகுண்டம்' என்று கூறவில்லை.

*மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள்*
*சொல்வதிலோர் மகிமையில்லை*

என்று கூறிப் புதுமையை ஏற்க மறுக்கும் தமிழர்களின் மனக் கதவைத் தட்டுகிறார்.

தமிழில் முடியுமா என்று நம்பிக்கையற்றுக் கேட்கும் அறிவாளிகளுக்கும் எழுத்தாளர்களுக்கும்,

*வான மளந்த தனைத்து மளந்திடு*
*வண்மொழி வாழியவே*
*ஏழ்கடல் வைப்பினுந் தன்மணம் வீசி*
*யிசை கொண்டு வாழியவே*
*எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ்மொழி*
*என்றென்றும் வாழியவே.*

என்று தமிழை வாழ்த்தித் தமிழர்களுக்கு நம்பிக்கையூட்டுகிறார்.

**பாரதியும் இலக்கணமும்**

பாரதியாரின் உணர்ச்சிமிகு கவிதையின் முன் இலக்கணம் இருந்த இடம் தெரியாமல் மறைந்தது. கவிதையும் இலக்கணமும் நகமும் சதையுமாக இருந்ததை மாற்றியவர் பாரதியார்.

மொழிகளின் தோற்றம் பற்றிப் பாரதியார் கொண்டிருந்த கருத்துகள் அறிவியல் சார்ந்ததாகக் கருத வாய்ப்பில்லை.

'தமிழ்நாட்டு மாதருக்கு' என்னும் கட்டுரையில் அவர் கீழ்க்கண்டவாறு எழுதுகிறார்.

> *தமிழ்ப் பாஷைக்கு இலக்கணம் முதன்முதலாக அகஸ்தியராலும் அவருடைய சிஷ்யராகிய திரணதூமாக்கி (தொல்காப்பியர்) என்ற ஆரிய முனிவராலுமே சமைத்துக் கொடுக்கப்பட்டது என்பது மெய்யே. எனினும் வடமொழிக் கலப்புக்கு முந்தி தமிழுக்கு வேறுவகையான இலக்கணம் இருந்து ஒருவேளை பின்னிட்டு மறைந்திருக்கக் கூடுமென்று நினைப்பதற்குப் பல ஏதுக்கள் இருக்கின்றன*

இக்கருத்துகள் பாரதியாரின் மொழி பற்றிய கருத்தைத் தெளிவாக்கு கின்றன.

**இலக்கணக் கூறுகள்**

பேச்சு வழக்கிலுள்ள இலக்கண அமைப்புகள் எழுத்து வழக்கிற்கு வரும்போது அதனைத் தரப்படுத்திப் பாரதியார் தமது கவிதைகளில் படைத்துக் காட்டியுள்ளார்.

| | எழுத்து வழக்கு | பேச்சு வழக்கு | பா.ப.எ.வ. |
|---|---|---|---|
| | *– ற் –* | *– ச் + இ –* | *– ச் – + உ (து)* |
| எ.கா. | *போயிற்று* | *போச்சி* | *போச்சுது* |

**துணை வினையமைப்பு**

முதல் வினையின் இ.வி.எ. வடிவம் + துணைவினை (விடு)

| | | | |
|---|---|---|---|
| எ.கா. | *கண்டுவிட்டாய்* | *கண்டுட்டே (பார்த்துட்டெ)* | *கண்டிட்டாய்* |

**ஏழாம் வேற்றுமை அமைப்பு**

| | | | |
|---|---|---|---|
| | *– இல் –* | *– லெ –* | *– லே –* |
| எ.கா. | *கானத்தில்* | *கானத்துலெ* | *கானத்திலே* |

**நிகழ்கால வினையமைப்பு**

| | | | |
|---|---|---|---|
| | *– கின்று –* | *– ø –* | *– ø –* |
| எ.கா. | *காற்றடிக்கின்றது* | *காத்தடிக்குது* | *காற்றடிக்குது* |

**நிகழ்கால வினையமைப்பு விளிச்சொல்**

வினைமுற்று (கின்று) அடி.வி.மு.(–ø–) வி.மு.(–கு)அடி

எ.கா. *வினைஅடி*

*தருகின்றதடி* *தருதடி* *தருகுதடி*

**துணைவினையமைப்பு**

மு.வி. வேண்டும் (செ.எ.)

எ.கா. *தரவேண்டும்* *தரவேணும்* *தரவேணும்*

**தொழிற்பெயர் துணைவினை**

எ.கா. மறக்கலானேன் மறந்துருச்சி மறக்கலாச்சு

**வியங்கோள்/ஏவல்**

வி.அடி/வி.மு. வி.உ./ஏ.உ. –குதி–

–ஆக– –ø–

எ.கா. *செய்வாயாக* *செய்* *செய்குதி*

**முதல்வினை, எதிர்மறைச்சொல் (துணைவினை)**

(செ.எ.)

எ.கா. *சொல்லமுடியவில்லை* *சொல்லமுடியல* *சொல்லிடப்படாது*

**துணைவினையமைப்பு**

மு.வி. (வி.எ.) + விடு

எ.கா. *செய்துவிடாமல்* *செய்யாம* *செய்திடாமே*

**தொடரமைப்பு**

பாரதி தொடர்களை அமைத்துச் செல்லும் போக்கில் கூறும் கருத்துக்கேற்ப எளியவாக்கியம், தொடர்வாக்கியம், கூட்டுவாக்கியம் மூன்றையும் அமைத்துச் சொல்வார். அவற்றுள் சில வருமாறு:

**எளிய வாக்கியம்**

*உழைப்பு எப்போதும் உண்டு*
*தேசியக் கல்விக்குக் குடும்பக் கல்வியே வேர்*
*வீட்டுப் பழக்கந்தான் நாட்டிலும் தோன்றும்*
*நமது தேசத்தில் வறுமை அதிகம்*

**தொடர் வாக்கியம்**

*ராஜ்யத்தில் உண்மை அம்சம் உண்டானால் அதை வணங்குவோம்*
*பாபத்தை வணங்கோம்; பாபத்தை வணங்கோம்*
*தெய்வத்தை நம்பி நாம் அறத்தைச் செய்தால், நம்முடைய யோகக்ஷேமங்களைத் தெய்வம் ஆதரிக்கும் என்று பகவத் கீதை சொல்லுகிறது*

**கூட்டு வாக்கியம்**

*நூற்றைம்பது வருஷம் பிரிட்டிஷ் ஆட்சி நடந்த பிறகு இன்று சென்னை மாகாணத்தாரின் கஷ்டங்களுக்கு வங்காளத்தான் இரக்கப்படக் கூடாதென்று கட்டளை போடுகிறார்கள்.*

*இந்தியாவில் பிறர் சினத்தையும் தமர் நகைப் பையும் கருதாமல் தோல்விக்கு அஞ்சாமல் ஆண்மை காட்டும் ஆண்மக்கள் வேண்டும்.*

**பிற தொடர்கள்**

**எழுவாய் இல்லாத் தொடர்**

*கூடியவரை பேசுவது போலவே எழுதுவதுதான் உத்தமமென்பது என்னுடைய கட்சி.*

*பரிட்சைக்கு உருப்போடுகிறாம்*

*ப்ரெஸ்டிஜ் தேவதைக்கு நமஸ்காரம் போடு*

*உடம்பை வலிமை செய்வதற்கு மனவலிமை வேண்டும்.*

**எழுவாய் மாறிவரும் தொடர்**

*அற்பக் காரியங்களுக்கெல்லாம் ஒருவரையொருவர் வேலையேவி வதைக்கும் தொல்லை நமக்குள்ளே அதிகம்.*

*எல்லோருமே வீரர் அல்லர், பயந்தவர்கள் உலகத்தில் உண்டு என்பதை நான் அறிவேன்.*

*தெய்வத்தை நம்பி நாம் அறத்தைச் செய்தால் நம்முடைய யோக க்ஷேமங்களைத் தெய்வம் ஆதரிக்குமென்று பகவத்கீதை சொல்கிறது.*

**பெயர்ப் பயனிலைத் தொடர்**

*தேசீயக் கல்வி கற்றுக் கொடுக்காத நாடு மனிதப் பிசாசுகள் உருவாகும் விஸ்தாரமான சுடுகாடேயாம்!*

**வினைப்பயனிலைத் தொடர்**

*தற்கால வழியை அனுசரித்து நாம் ஜனாதிகார சபைகள் ஏற்பதினால் அவற்றிலும் எவனாவது ஒருவன் மற்றவர்களை மேய்த்திடும் தன்மை உண்டாகிறது.*

**பெயரெச்சத் தொடர்**

*அழுத பிள்ளை பால் குடிக்கும்.*

**சிறப்புப் பெயரெச்சத் தொடர்**

*வலிமையே வலிமை*

*முடியினும் முடியலாம்*

*புகழுகிற புகழ்ச்சி*

*மினுக்கு மினுக்கி*

**வினையெச்சத் தொடர்**

சிறு சிறு தொடர்களை இணைத்து நீண்ட தொடரை அமைக்க வினையெச்சத்தைப் பயன்படுத்துவார். ஒரு எடுத்துக்காட்டு வருமாறு:

*காலை பத்துமணி இருக்கும் நான் ஸ்நானம் செய்து பூஜை முடித்து, பழம் தின்று, பால் குடித்து, வெற்றிலை போட்டு மேனிலத்திற்கு வந்து, நாற்காலியின்மேல் உட்கார்ந்து கொண்டு இன்ன காரியம் செய்வதென்று தெரியாமல் வானத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.*

**பெயரடைத் தொடர்**

*மிகுந்த கெட்ட எண்ணம்*

*மிக உயர்ந்த புத்தி*

*சால மிகப்பெரிய பேதமை*

**விடையடைத் தொடர்**

*மிகவும் பொருத்தமாகத் தோன்றுகிறது*
*மிகவும் உயர்த்திக் கொண்டாடுகிறார்*
*மிகவும் சிரித்தார்*

**அடையுடன் கூடிய விளித்தொடர்**

*தமிழ்நாட்டு மாதராகிய என் அன்புக்கும் வணக்குத்துக்கும் உரிய சகோதரிகளே*

**அடையில்லா விளித்தொடர்**

*'சகோதரிகளே! தமிழ்நாட்டின் நாகரிகம் மிகவும் புராதனமானது'*

**அடுக்குத்தொடர்**

*வியர்க்க வியர்க்க உழைத்தால் நல்ல பசியுண்டாகும். கணக்கற்ற கணக்கற்ற கணக்கற்ற துஷ்ட மிருகங்களுடனும் பாம்புகளுடனும் போராடிப் போராடி மண்ணுலகத்தின் மீது மனிதனை அரசனாகவும், மற்றைய ஜந்துக்களெல்லாம் இங்கு வாழ்வதற்கு இயற்கை உரிமை இல்லாத அடிமைக் குடிகளாகவும் ஏற்படும் நிலைமையுண்டாயிற்று. மனிதனாற் கொல்லப்படத்தக்க, மனிதனைக் காட்டிலும் பலம் குறைந்த ஜந்துக்குலங்கள் கணக்கற்றன கணக்கற்றன கணக்கற்றன பலபல பற்பல, பல, பல, பல.*

**வேற்றுமைத் தொடர்**

*உடம்பிலே நோயில்லாமல் வலிமையுடன் இங்கே நூறாண்டு வாழலாம்.*

**வியங்கோள் தொடர்**

*தமிழா, உனக்கு நன்றாக அமையும்படி பராசக்தி அருள் புரிக. உன்னுடைய நோய்களெல்லாம் தீர்க. உனது வறுமை தொலைக. உனக்கு இனிமையும் அழகுமுடைய வஸ்துக்களெல்லாம் வசப்படுக. பஞ்ச பூதங்களும் உனக்கு வசப்படுக. நீ எப்பொழுதும் இன்பம் எய்துக.*

**உவமத் தொடர்**

*உனது பெயரைக் கேட்டால் வேட்டை நாய் விழுவது போல விழுந்து காதால் கேட்க முடியாத கெட்ட வார்த்தைகள் சொல்லி நிந்திக்கிறார்.*

**உருவகத் தொடர்**

*பிரிட்டிஷ் ராஜாங்கத்தார் விடுதலைக்கு அறிவுக்கதவை முற்றிலும் அடைத்துவிடவில்லை.*

**நடையியல் கூறுகள்**

**ஒலிநயம்**

சில அடைச்சொற்களைப் பெயர்ச் சொற்களோடும் வினைச் சொற்களோடும் தொடர்ந்து இணைப்பதன்மூலம் ஒருவித ஒலிநயத்தை உண்டு பண்ணுதலைப் பாரதி நடையில் காணலாம்.

எ.கா. *கடலிடைப் பட்டதொரு சிறுதோணி போல்*
*அலைப்புண்டும் புரளுண்டும், மோதுண்டும்,*
*எற்றுண்டும், சுழற்றுண்டும் தத்தளிக்கிறது.*

**சொல்நயம்**

ஒரு பொருள் குறிக்கும் பல சொல் ஆட்சியை பாரதி நடையில் ஆங்காங்கே காணலாம். எ.கா.:

*பண்டிதர்களாக வெளிப்பட்டுப் பிரசங்கங்களும், கதைகளும், காலக்ஷேபங்களும் நடத்தும் இந்துக்களிலே நூற்றுக்கு தொண்ணூறு பேர் சமையல் வேலைக்குப் போக வேண்டியவர்கள். அதைவிட்டு, உலகத்துக்கு ஞானோபதேசம் பண்ணக் கிளம்பிவிட்டார்கள். இது பெரிய தொல்லை, உபத்திரவம், தொந்தரவு, கஷ்டம், சங்கடம், ஹிம்சை, தலைநோவு.*

**பொருள்நயம்**

சொல் குறிக்கும் நேரடிப் பொருள் ஒன்றாகவும், ஆளும் பொருள் வேறாகவும் இருக்கும். சொல்லாட்சிகள் பாரதி நடையில் அதிகம் காணலாம்.

*'தமிழ்நாட்டு ஜனங்களுக்கு இரும்புக் காதாக இருப்பதால் திரும்பத் திரும்பத் திரும்பத் திரும்ப*

*ஏழெட்டுப் பாட்டுக்களை வருஷக்கணக்காகக் கேட்டுக் கொண்டு இருக்கிறார்கள்'.*

**தொடர் நயம்**

பாரதி உரைநடையில் கவிதை நயத்தையும், எள்ளல் நயத்தையும் வருணனை முறையையும் சில இடங்களில் காணலாம். பாரதி கவிதைகளைப் படைக்குமுன் கட்டுரை களைப் படைத்தமைக்கு இவற்றைச் சான்றாகக் காட்டலாம்.

**கவிதைநயம்**

*நம்பினார் கெடுவதில்லை*
*நான்கு மறைத் தீர்ப்பு – இது*
*நான்கு மறைத் தீர்ப்பு*

**எள்ளல்**

*தமையனாருக்குக் கோட்டையில் ரெவின்யூ போர்டு ஆபிஸில் உத்தியோகம் அவருக்கு நான்கு வருடங்களுக்கு ஒருமுறை ஆபிஸில் பத்து ரூபாயும், வீட்டில் இரண்டு குழந்தைகளும் ப்ரமோஷன்.*

**வருணனை நயம்**

*'வீதியிலிருந்து குழந்தைகளின் சப்தம் கேட்கிறது. வண்டிச் சத்தம், பக்கத்து வீட்டு வாசலில் விறகு பிளக்கிற சப்தம், நான்கு புறத்திலும் காக்கைகளின் குரல், இடையிடையே குயில், கிளி, புறாக்களின் ஓசை, தொலைவிலிருந்து வரும் கோவிற்சங்கின் நாதம். நடுவில் சேவலின் கொக்கரிப்பு, இடையிடையே தெருவில் போகும் ஸ்திரிகளின் பேச்சொலி, அண்டை வீடுகளில் குழந்தை அழும் சப்தம், 'நாராயண, கோபாலா' என்று ஒரு பிச்சைக்காரரின் சப்தம், நாய் குரைக்கும் சப்தம், கதவுகள் அடைத்துத் திறக்கும் ஒலி, வீதியில் ஒருவன் ஹீகும் என்று தொண்டையை லேசாக்கி இருமித் திருத்திக் கொள்ளும் சப்தம், தொலைவிலே காய்கறி விற்பனை சப்தம், 'அரிசி, அரிசி' என்று அரிசி*

*விற்றுக்கொண்டு போகிற ஒலி – இப்படி பலவிதமான ஒலிகள்.*

**எதிர்ச்சொல்**

*பெரிய பெரிய கஷ்டங்கள் பட்ட பிறகு தான் சிறிய உண்மைகள் புலப்படுகின்றன.*

**மேற்கோள்**

கட்டுரையைத் தொடங்கும்போது திருக்குறளோடு தொடங்குவார்.

*கனவிலும் இன்னாது மன்னோ வினைவேறு*
*சொல்வேறு பட்டார் தொடர்பு*

என்றும், கட்டுரையை முடிக்கும்போது, 'உள்ளுவதெல்லாம் உயர்வு உள்ளல்' என்றும் கூறி முடிப்பார். இதுபோல் பல இடங்களில் காணலாம்.

**பழமொழி**

*முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்*

*ஆறிலும் சாவு நூறிலும் சாவு*

*சுவரில்லாமல் சித்திரம் எழுத முடியாது*

*பணமில்லாமல் பிணம்*

தம்முடைய கவிதை, சிறுகதை, கட்டுரை, உரைநடையில் பாரதியார் இலக்கணங்களை இவ்வாறு பயன்படுத்தியுள்ளார்.

# பாரதியாரின் பன்மொழி அறிவாற்றல்

பாரதியாருக்குப் பல மொழிகளில் பயிற்சி இருந்தது. ஆனால் அவர் நெஞ்சில் பதிந்த மொழி தமிழ் மட்டுமே. தமிழ் மொழியையே அவர் பேற்றி நின்றார். தமிழ் என்று சொன்னாலே காதில் தேன் பாய்கிறது என்று கூறி மகிழ்ந்தார்.

தமிழ்மொழி மூலமே சமுதாயத்திற்குப் பல புதுமைகளை எடுத்துக் கூறினார்.

வேதம் படிக்கும் பிராமண குலத்தில் பிறந்த பாரதியார் இயல்பாகவே அனைத்தையும் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற ஆர்வத்துடன் இருந்தார். அதனால் பலமொழிகளையும் கற்றுத் தேர்ந்த அறிஞராய் விளங்கினார்.

## பாரதி அறிந்த பிறமொழிகள்

மொழியின் ஆற்றல் அளப்பறியது. மொழியின் துணையினால் ஒரு நாட்டின் வரலாற்றையே மாற்றியமைக்கலாம்.

ஒன்றைப் பற்றி விமர்சனம் செய்கிறோமென்றால் அதைப் பற்றி உள்ளும் புறமும் நன்கு தெரிந்து இருக்கவேண்டும். அப்படிப் பட்டவருடைய விமர்சனம் அல்லது கருத்துத்தான் ஏற்றுக் கொள்ளப்படும்.

தமிழ்மொழியைப் பற்றிப் பாரதியார் சிறந்தமொழி என்றும் உயர்வானது என்றும் கூறுகிறார். தமிழ்மொழியை மட்டும் தெரிந்தவர் கூறியிருப்பின் இக்கருத்தை ஏற்கத் தேவையில்லை. ஆனால் பாரதியாருக்குப் பல மொழிகளில் நல்ல அனுபவமும் நல்ல தேர்ச்சியும் உண்டு. பிற மொழிகளுடன் ஒப்பிட்டுத் தமிழ்மொழியின் பெருமையைப் பறைசாற்றியிருக்கிறார்.

*பன்மொழி கற்றவர் பாரதி. செப்புமொழி பதினெட்டு உடைய பாரத மாதாவின் 'சிந்தனை'யைத் தமிழில் ஒலிபெருக்கியவர். மொழிப் பிரிவுகளால் நாட்டின்*

*அய்க்கியம் பாதிக்காது என்று நம்பியவர். தமிழ்ப்பற்றால் வேறு இந்திய மொழியின் மீதுள்ள அபிமானம் குறையவில்லை.*

*தமிழ்மொழியும் தமிழ்நாடும் தேசிய நீரோட்டத்தில் இணைந்து வளர வற்புறுத்தி யிருக்கிறார். தமிழ்நாட்டிலே தமிழ் சிறந்திடுக. பாரத தேசம் முழுவதிலும் எப்போதும் போலவே வடமொழி வாழ்க என்று தேசியக் கல்வியில் வரைந்துள்ளார். 'இந்தியா'விலும் ஹிந்து பாஷை பழக்கம் ஒதுக்குகிற தாளில் எழுதினார். ஹிந்தி இல்லாமல் இப்போது நமக்குள் அதிகமாகப் பழக்கமுற்று வருகின்ற இங்கிலிஷ் பாஷையைப் பொதுமொழியாகிவிடக் கூடாதேயென்றால் அது அசாத்தியமும் மூடத் தனமுமான நினைப்பாகும்*

என்கிறார். தமிழின் பெருமையைப் பற்றிக் குறிப்பிடும் பாரதியார்,

*எனக்கு நாலைந்து பாஷைகளிலே பழக்க முண்டு. இவற்றிலே தமிழைப்போல வலிமையும் திறமையும் உள்ளத்தொடர்பும் உடைய பாஷை வேறொன்று மில்லை.*

என்று தாம் கற்ற மொழிகளுடன் ஒப்பாய்ந்து தமிழின் பெருமையைக் குறிப்பிடுகிறார்.

தமிழ் மக்களின் உரிமைப் போராட்டத்தில் மொழி ஆதிக்கப் போராட்டத்திற்குக் குறிப்பிட்ட இடம் உண்டு. சமசுகிருதப் பண்பாட்டு ஆதிக்கம் ஆங்கிலேயர் காலத்திலும் நீடித்தது. இவ்வாதிக்கத்தை எதிர்த்துப் பல துறையிலிருந்தவர்களும் போராடினார்கள்.

*அதன் ஆதிக்கத்தைச் சமயமொழித் துறைகளில் முறியடிக்க மனோன்மணீயம் சுந்தரனார் முன்முயற்சி எடுத்தார். மறைமலையடிகள், நாவலர் சோமசுந்தர பாரதியார், க.சு. பிள்ளை, கா. அப்பாதுரை, தேவநேயப் பாவாணர், பரிதிமாற் கலைஞர், பாவலரேறு பெருஞ்சித்திரனார் முதலியவர்கள் அம் முயற்சியை நெறிப்படுத்தி*

> *வலுவூட்டியவர்கள் ஆவர். நீதிக்கட்சிக் காலத்தில் கல்வித்துறையில் சமஸ்கிருதத்திற்கு இருந்த ஆதிக்கத்தைப் பெருமளவு ஒழித்தனர். இருப்பினும் கோயில்களில் அதன் ஆதிக்கம் இன்னும் நீடிக்கிறது. பாரதியார் சமஸ்கிருதத்தைத் தேவ பாஷையெனப் போற்றனார்.*

என்று கு.வெ.கி. ஆசான் கூறுவதும் உண்மைதான். இருப்பினும் மொழிக் கொள்கைகளில் பாரதி தேசிய பாஷை, தேச பாஷை என்ற கருதுகோள்களை முன்வைத்தார்.

அறிவியல் துறைச் சொற்களை எழுதுகையில் பல சொற்களுக்குத் தமிழில் அர்த்தம் இல்லை. அச்சொற்களுக்குப் புதிதாகத் தமிழில் சொற்களைக் கொண்டுவர வேண்டும் என்று கூறினார். அதுவரை அறிவியல் துறைக் கலைச்சொற்களை எழுதுகையில் முடிந்தவரை தமிழிலும், தமிழில் சொற்கள் இல்லாத காலங்களில் சமசுகிருதத்திலும், தேவைப்பட்டால் ஆங்கிலத்திலும் கூட எழுதலாம் என்று கூறியிருக்கிறார்.

> *பிறமொழியைப் படிக்கவே கூடாது என்பது பாரதியின் எண்ணமன்று. பாரதிக்கே பல மொழிகள் தெரியும். தாய்மொழிக்கு முதலிடம். காலமிருப்பின் பிற மொழிகளைக் கற்கலாம். தாய்மொழியைத் தள்ளிவிட்டு ஆங்கிலம் படித்தலை அதுவே கதியென நம்பிக் கிடத்தலைப் பாரதி வெறுத்தான்.*

என்கிறார் வைத்தியலிங்கம்.

பாரதியார் தமிழ்மொழி மீது பற்றுக் கொண்டவர் என்பதால் தமிழ்ப் பள்ளிக்கூடங்களில் தமிழ்மொழி, வரலாறு இதை மட்டும் கற்பிக்கப்பட வேண்டும் என்று கூறவில்லை. அனைத்து மொழியையும் தமிழ்மக்கள் நன்கு கற்க வேண்டுமென்று விரும்புகிறார்.

> *ஹிந்து தேச சரித்திரம் மாத்திரமேயல்லாது சௌகர்யப்பட்டால் இயன்றவரை அராபிய, பராசீக, ஐரிஷ், போலீஷ், ருஷிய, எகிப்திய, இங்கிலீஷ், பிரான்சு, அமெரிக்க, இத்தாலிய, கிரேக்க,*

*ஜப்பானிய, துருக்கி தேசங்கள் முதலியவற்றின் சரித்திரங்களும் சில முக்கியமான கதைகளும் திருஷ்டாத்தங்களும் பயிற்சி கொடுக்க ஏற்பாடு செய்தல் நல்லது.*

என்கிறார் பாரதியார்.

**பிறமொழி கற்றல்**

தமிழ்மீது கொண்ட பற்றால் கண்மூடித்தனமாக அனைவரும் தமிழ்மொழி மட்டுமே கற்கவேண்டும் என்று பாரதியார் குறிப்பிடவில்லை. பிறமொழிகளையும் கற்க வேண்டும் என்று குறிப்பிடுகிறார்.

*சங்கீத நயனமுடைய தமிழ்ப் பிள்ளைகள் முதலாவது கொஞ்சம் இங்கிலீஷ் கற்றுக் கொள்ள வேண்டும். தமிழ்ப் பிள்ளைகளே வெளிநாடுகளுக்குப் போய் உங்களுடைய அறிவுச் சிறப்பினாலும் மனவுறுதியினாலும் பலவிதமான உயர்வுகள் பெற்றுப் புகழுடனும் செல்வத்துடனும், வீரியத்துடனும், ஒளியுடனும் திரும்பி வாருங்கள்.*

**தமிழ் முழக்கமும் நாட்டு ஒருமைப்பாடும்**

தம்முடைய தமிழ்மொழிப் பற்றைக் குறித்துப் பாரதியார் மேலும் தெளிவுபடுத்துகிறார். தமிழ்மொழிப் பற்று இந்தியத் தேசிய ஒருமைப்பாட்டுக்கு மாறானதல்ல என்றும் தமிழ்மொழி எங்கும் பரவ வேண்டும் என்றும் கூறுவதால் இந்திய நாடு முழுவதும் தமிழே திகழவேண்டும் என்று கூறவில்லை. அந்தந்த மாநிலங்களில் அந்தந்த மொழி சிறக்க வேண்டும் என்கிறார்.

*முப்பது கோடி முகமுடை யாளுயிர்*
*மொய்ம்புற வொன்றுடையாள் – இவள்*
*செப்புமொழி பதினெட்டுடையாள் எனில்*
*சிந்தனை யொன்றுடையாள்*

என்று கூறி மகிழ்கிறார் பாரதியார்.

**ஆங்கிலமும் பாரதியும்**

வாணிகத்தின் பொருட்டுத் தமிழகத்திற்கு வந்த ஆங்கிலேயர் ஆட்சியைப் பிடித்து அரசாண்டு கொண்டிருந்த காலத்தில் தமிழகத்தின் செல்வத்தை மட்டும் அவர்கள் கொண்டு செல்லவில்லை.

மக்களின் சிந்தனையையும், உரிமை உணர்வுகளை, தன்மானத்தைப் பறித்துக் கொண்டிருந்தனர். தம் சொந்த நாட்டிலேயே பிறர்க்கடிமையாக இருந்தனர் தமிழ் மக்கள்.

கல்வி என்றாலே ஆங்கிலம் கற்பதுதான் என்ற எண்ணம் மிக்கிருந்தது. மனிதன் என்றலே அவன் ஆங்கிலேயன்தான் என்றும் கூறி வந்தனர். தனது தாய்மொழி நாவில் ஏற நடுங்கிற்று.

இங்ஙனம் அனைத்தையும் ஆங்கிலேயர்களைப் போல மாற்ற முடிந்த தமிழர்களால் தமது உடல் எண்ணத்தை மட்டும் மாற்ற முடியாமல் தவித்தனர்.

ஆனால் இந்த மாற்றம் எதிலும் பாரதியார் சிக்கவில்லை. தமிழர்களின் இந்த நிலையை மாற்ற முயன்றார்.

*கண்ணிரண்டும் விற்றுச் சித்திரம் வாங்கினால்*
*கைகொட்டிச் சிரியாரோ?*

என்று கேட்டுக் கிளர்ந்தெழுந்தார். தமிழர்கள் அடிமைகளாய் இருப்பதைக் கண்டு,

*என்று தணியு மெங்கள் சுதந்திர தாகம்*
*என்று மடியு மெங்கள் அடிமையின் மோகம்*

என்று வினவுகிறார்.

ஆங்கிலேயரைப் பின்பற்றினாலன்றித் தமிழ்ச் சமுதாயத்திற்கு விடிவில்லை என்று சிலர் கூறிக்கொண்டிருந்தனர். இந்தப் பரிதாப நிலையைக் கண்ட பாரதியார்,

*வேற்றிசை வாழும் வெண்ணிற மக்களின்*
*செய்கையும் நடையும் தீனியும் உடையும்*
*கொள்கையும் மதமும் குறிகளும் நம்முடையவற்றிலும்*
*சிறந்தன ஆதலின் அவற்றை முழுதுமே தழுவி*
*மூழ்கிடி னல்லால் தமிழ்ச் சாதி தரணி மீதிராது*

நாடு விடுதலையடைந்து பல ஆண்டுகளாகியும் மக்கள் ஆங்கிலத்தை விடத் தயாராக இல்லை. ஆங்கில வழிக் கல்விதான்

அறிவு தரும் என்ற எண்ணத்தில் ஊர்தோறும் ஆங்கிலப் பள்ளிகளைத் துவக்கித் தங்கள் பிள்ளைகளுக்கு ஆங்கில வழிக் கல்வியை அளிக்கும் பரிதாப நிலை வளர்ந்து வருகிறது.

இன்றுவரை இந்த நிலைமை தொடர்ந்து வருகின்றது. தமது சொந்த நலன்களைக் கருத்தில் கொண்டு ஆங்கிலவழிக் கல்வியைக் கற்றுப் பல சலுகைகளைப் பெற்றார்களேயொழியத் தனது நாடு, மொழி, உரிமை என்ற எண்ணமில்லாமல் இருந்தனர். ஆங்கியேர்களைத் துரை என்று துதித்து வந்தனர். தமிழர்களின் இந்த நிலைமையைக் கண்ட பாரதியார்,

*நெஞ்சு பொறுக்குதில்லையே*
*இந்த நிலைகெட்ட மனிதரை நினைத்துவிட்டால்*
*அஞ்சி அஞ்சிச் சாவார் – இவர்*
*அஞ்சாத பொருளில்லை அவனியிலே*

என்று பொருமி நின்றார்.

புலியின் தோலைப் போர்த்துக் கொண்டால் பசு புலியாகி விட முடியாது. புலியின் தோல் பசுவின் தோற்றத்தை மறைத்துப் புலிபோலக் காட்டலாமே தவிர, புலியின் உணர்வுகள் பசுவின் குருதியில் கலந்து வெளிப்பட இயலாது. அதுபோலப் பசுவின் தோலைப் போர்த்துக்கொண்ட புலியும் பசுவாக எவ்வகையிலும் ஆதலியலாது. என்னதான் வெள்ளையனைப் போல வேடமிட்டாலும் தமிழனால் வெள்ளையனாகிவிட முடியாது. உயர்வு பெற்றிடவும் ஒவ்வாது. இது பாரதி கொண்ட முடிவு. அதனால்,

*நமது மூதாதையர் நயமுறக் காட்டிய*
*ஒழுக்கமும் நடையும் கிரியையும் கொள்கையும்*
*ஆங்கிலர் காட்டிய அவ்வப் படியே*
*தழுவிடின் வாழ்வு தமிழர்க் குண்டு*

என்று நம்பிக்கையுடன் கூறுகின்றார்.

பாரதியாரின் தந்தை அவரை ஆங்கிலப் பள்ளிக்கு அனுப்பிப் படிக்க வைத்ததைப் பற்றிக் கூறுகையில்,

*செலவு தந்தைக்கோராயிரம் சென்றது*
*தீதெ னக்குப்பல் லாயிரஞ் சேர்ந்தன*
*நலமொ ரெட்டுணை யுங்கண்டி லேனிதை*
*நாற்பதாயிரம் கோயிலிற் சொல்லுவேன்*

*சிலமுன் செய்நல் வினைப்பய னாலுநந்*
*தேவி பாரதத் தன்னை யருளினும்*
*அலைவு றுத்துறும் பேரிருள் வீழ்ந்து நாள்*
*அழிந்தி டாதொரு வாறுபி ழைத்ததே*

என்று கூறுகின்றார்.

எந்த மொழியைக் கற்றாலும் தமிழ்மொழியையும் கற்க வேண்டும். தமிழ்மொழியைத்தான் உயிராகக் கொள்ளவேண்டும் என்கிறார்.

*ஆங்கிலத்தைக் கற்கையிலும்*
*அயல்மொழியைக் கற்கையிலும்*
*எந்த நாளும்*
*தீங்கனியைச் செந்தமிழைத்*
*தென்னாட்டின் பொன்னேட்டை*
*உயிராய்க் கொள்வீர்*

1947ஆம் ஆண்டு இந்தியர்களை அடிமைப்படுத்தியிருந்த ஆங்கிலேயர்கள் நாட்டை விட்டுச் சென்ற பிறகும் ஆங்கிலமொழி இந்தியா முழுவதும் வேரூன்றி இருந்ததும் குறிப்பாகத் தமிழர்கள் அம்மொழியைத் தம் தலையில் வைத்துக் கொண்டாடியதும் அறிவீனமான செயலாகும்.

புதுமையான ஷெல்லியின் சிந்தனையால் கவரப்பட்ட பாரதியார் அதைத் தமிழ் மக்களுக்கு அறிமுகம் செய்தார்.

இந்திய மக்களை அடிமைப்படுத்தி ஆட்சி செய்த ஆங்கிலேயர்களை வெறுத்த பாரதியாருக்கு ஆங்கில மொழியைப் பயன்படுத்துபவரை அடிமைத்தனத்தின் சின்னமாகக் கருதினார்.

ஆங்கில மொழியைப் பாரதியார் எழுதக் காரணம் என்ன என்பது குறித்துக் கூறுகையில்,

*தற்காலத்தில் நமது தேசத்தில் பாடசாலையில் பயிற்றுவிக்கும் இங்கிலீஷ் படிப்பு சுத்தமாகப் பிரயோஜனமில்லை எனும் பாரதியின் கூற்று அவருக்கு ஆங்கிலக் கல்வியின் மீது இருந்த வெறுப்பைக் காட்டுகிறது. 'ஷெல்லிதாசன்' என்று புனைபெயரை வைத்துக்கொண்டு 'ஷெல்லிக்கழகம்' ஒன்றைத் தோற்றுவித்த பாரதி அரவிந்தரின் 'Fox*

*with a golden tail' எனும் கட்டுரையினை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தும் இருக்கிறார். ஆன்மீக அனுபவத்தில் ஒரு பரவலான வெளிப் பாட்டிற்காகவே பாரதி ஆங்கிலத்தை எழுதினார்.*

என்பதைத் தவிரப் பாரதிக்கு ஆங்கில மோகமோ தனி ஈடுபாடோ எதுவுமில்லை. தாம் பணிபுரிந்த 'இந்தியா' இதழில் தொடக்கத்தில் ஆங்கிலத் தலைப்புகளைத் தமிழ் ஒலிபெயர்ப்பாகக் கொடுத்து எழுதினாலும் பின்னாளில் அவர் அவ்வாறு பயன்படுத்துவரை முழுக்கவும் வெறுத்தார்.

## பாரதியின் மொழிக்கோட்பாடு

உலகில் பெரும்பகுதி மக்கள் தங்கள் நாட்டின் மொழியை வைத்துத்தான் நாட்டை அறிமுகம் செய்கிறார்கள்.

ஒரு நாட்டைக் காட்டும் சிறந்த கருவியாக மொழி திகழ்கிறது. ஆங்கிலேயர், பாரசீகர், செருமானியர், சப்பானியர் போன்ற அனைத்தும் நாட்டின் பெயரை ஒட்டி எழுந்தவையே.

இந்திய நாட்டில் மொழிகள் எப்படி திகழ வேண்டும் என்பதில் பாரதியார் தெளிவாக இருந்தார். இதை,

*தேசிய நோக்கில் பாரத நாட்டின் ஆட்சி மொழியாக சமஸ்கிருதமும், மாநிலங்களில் இருமொழிக் கொள்கையும், கல்வி நிலையில் தாய்மொழிவழித் தொடக்கக் கல்வியும், பாரத ஐக்கியத்திற்கு (உயர்கல்வி நிலையில்) வடமொழிப் பயிற்சியும் தமிழர்தம் பயன்பாட்டிற்கு வடமொழிபோல் தமிழும் சிறந்திடப் பாரதி கருதினார்*

என்ற கருத்தும் உறுதிப்படுத்துகிறது.

பல மொழிகளைப் பேசும் பல பண்பாடுகளைச் சேர்ந்த பல இனமக்களைக் கொண்ட இந்திய நாட்டில்

*ஓரஞ் செய்திடாமே – தருமத்*
*துருதி கொன்றி டாமே*
*சோரஞ் செய்திடாமே – பிறரைத்*
*துயரில் வீழ்த்திடாமே*
*ஊரை யாளுமுறைமை*

வேண்டும் என்பதே பாரதியின் உளக்கருத்தாக இருந்திருக்கும்.

**இலக்கண இலக்கியம் குறித்த பாரதியின் சிந்தனைகள்**

முதன்முதலில் சிறந்த கவிதையும் இலக்கியமும் தோன்றிய மொழி தமிழ்மொழி. இதை ஆரோக்கியநாதன் அவர்கள்,

> *மனித நாகரித்தின் முதன்முதலாக இரண்டு பாஷைகளில் தான் (தமிழும், ஆரியமும்) உயர்ந்த கவிதையும் இலக்கியங்களும் சாத்திரங்களும் ஏற்பட்டன எனும் பாரதியின் வரிகளும் அவருக்கு மொழித்தோற்றம், இலக்கண வரலாறு போன்றவற்றில் ஒரு தெளிவான சிந்தனையில்லை என்பதை உணர்த்துகின்றன.*

என்கிறார்.

பாரதியார் மொழியின் தோற்றம், அதன் இயக்கம் பற்றி நன்கு அறிந்திருந்தார். காலத்திற்கேற்ப மாறும் மொழிக்குப் புதிய சொற்கள் தோற்றுவிக்கப்பட வேண்டும் என்றார்

**மொழி பற்றிய பாரதியார் கருத்துகள்**

மொழிக்கலப்பு, மொழி திரிபு பற்றிய பாரதியின் கருத்துக்களைப் பற்றி மொழிநூல் அறிஞர்,

> *இந்தியாவின் பெரும்பான்மையான பாஷைகள் சமஸ்கிருதத்தின் திரிபுகளேயன்றி வேறல்ல எனும் வரிகளும் ஹிந்தி, உருது, ஹிந்துஸ்தானி எல்லாம் ஒரு பாஷைதான். ஹிந்தி பாஷை சமஸ்கிருதத்தி லிருந்து பிறந்தது. இது சமஸ்கிருதப் பாஷையின் சிதைவு என்பதை ஹிந்துக்கள் தேவநாகிரியில் எழுதிச் சுயம்புவாகப் பேசுகிறார்கள். அதையே பார்சி, லிபியில் எழுதிக்கொண்டு முஷல்மான்கள் பேசிய போது அதற்கு ஹிந்துஸ்தானி அல்லது உருது என்று பெயர் வழங்கினார்கள் எனும் வரிகளும் பாரதிக்கு மொழிக்கலப்பு, மொழித்திரிபு, மொழித்தாக்கம் இவற்றைப் பற்றிய சிந்தனை அறிவியல் தெளிவின்றி இருந்ததை உணர்ந்து கொள்ள முடிகிறது. ஆனால் மொழி திரிபடையும் மாறும்*

> *எனும் பாரதியின் மொழி பற்றிய கருத்து தெளிவானதும் சரியானதுமாகும்.*

என்கிறார்.

**அற்புதக் கலைமொழி**

மொழி ஓர் அற்புதக்கலை என்று சொல்வது மிகையாகாது. ஆங்கில அறிஞர்,

> *மொழியின் வாயிலாக இலக்கியம் படைக்கப் படுதல் உண்டு. இது வியப்பூட்டும் அற்புத நிகழ்ச்சி போன்ற ஒரு அரிய கலை. மொழியின் வாயிலாக வெளிப்படுத்தப்படும் கலை ஒரு மனிதன் என்ன நினைக்கிறானோ அதை அழகாக வெளிப்படுத்தும் ஆற்றல் பெற்றது.*

என்கிறார் ஜி.கே. செஸ்டர்டன்.

வங்க மொழியில் இரவீந்திரநாத் தாகூர் பேச்சு வழக்கினை இலக்கிய வழக்காக்கியதனைப் போல் பாரதியும் தமிழன் பேச்சு வழக்கினை மாற்றும்படி வேண்டினார்.

**மொழித்தூய்மை வாதம்**

பாரதியார் உபயோகித்த நடையில் மொழித் தூய்மைவாதம் இல்லை.

> *மொழித்தூய்மை வாதம் பாரதியிடம் எள்ளளவும் காணப்படவில்லை. தொல்காப்பிய மரபுப்படி மொழி முதல் வாராத சகர, ரகர, லகர எழுத்துகள் கூடப் பாரதியின் பாட்டில் விரவி வந்துள்ளன. பிறமொழிச் சொற்கள் பலவற்றினைப் பாரதி தயக்கமின்றித் தேவைப்படும் இடங்களிளெல்லாம் சிலசமயம் தேவைப்படாத இடங்களில்கூடப் பயன்படுத்தியுள்ளார்.*

**இருவழக்கு**

தமிழ்மொழி பேச்சு, எழுத்து என்ற இருவேறு வழக்குகளைப் பெற்று விளங்குகிறது.

*பேச்சு வழக்கு, எழுத்து வழக்கு எனும் இருவேறு வழக்குகளை இடைவெளியோடு பெற்றுத் தமிழ்மொழி இரட்டைவழக்கு மொழியாகத் திகழ்கிறது. ஒவ்வொன்றும் தத்தமது பயன்பாட் டிற்குரிய ஒலியியல், உருபன், சொல், தொடரியல் ஆகியவற்றை மொழியியல் சிறப்புக் கூறுகளாகக் கொண்டுள்ளன. இரட்டை வழக்கு மொழி வரலாற்றில் எழுத்து வழக்கு சில நேரம் பேச்சு வழக்கினை நோக்கியும் பேச்சு வழக்கு சிலநேரம் எழுத்து வழக்கினை நோக்கியும் நெருங்கி வருவதுண்டு. இத்தகைய நெருக்க விலகல் நிலை அலைபோன்று இரட்டை வழக்கு மொழிகளிடையே காணப்படுவது வரலாற்று உண்மையாகும். இதனைப் பாரதி உணர்ந்திருந்தார்*

**கம்பர் ஒரு பெருங்கவிஞர்**

*கல்வியிற் பெரியன் கம்பன்*
*கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவிபாடும்*

என்பன கம்பரைப் பற்றி வழக்கில் உள்ள முதுமொழி ஆகும். தமிழ் நாட்டின் பெருமையைக் கூறும் பாரதியார்,

*கல்வி சிறந்த தமிழ்நாடு – புகழ்*
*கம்பன் பிறந்த தமிழ்நாடு*

என்று கூறிப் பெருமைப்படுகிறார்.

ஔவையார் பாடிய ஆத்திசூடியைப் பின்பற்றிப் புதிய ஆத்திசூடி இயற்றினார். இதன்மூலம் தமிழுக்கும் தமிழருக்கும் புத்துணர்ச்சி ஊட்டினார்.

பழகு தமிழில் பாடல் இயற்றியவர் உலகம் புகழும் திறமை கொண்டவர். 'புதிய அறம்பாட வந்த அறிஞன்' என்கிறார் பாவேந்தர்.

தன் வரலாறு அடங்கிய பாரதியாரின் படைப்புகள்.

*1. சுயசரிதை*
*2. பாரதி அறுபத்தாறு*

*3. சின்ன சங்கரன் கதை*
*4. கவிதாதேவி அருள்வேண்டல்*
*5. சீட்டுக்கவிதை – 1*
*6. சீட்டுக்கவிதை – 2*

என்பன.

பாரதியார் வரலாற்றில் புதுச்சேரி வாழ்க்கை பல மாற்றங்களை உருவாக்கியது. அரவிந்தரின் வேத அறிமுகமும், வ.வே.சு. அய்யரின் ஆன்மிக அறிவும், குவளைக் கண்ணனின் வைணவ இலக்கியப் பயிற்சியும், பல்வேறு சித்தர்களின் சந்திப்பும் பாரதியாரின் படைப்புகளையும் பாதித்தன. 1910க்குப் பிறகு வேத ரிஷிகளின் கவிதையும் கண்ணன் பாட்டும் போன்ற இலக்கியங்கள் உருவாயின. 1913–14ஆம் ஆண்டுகளில் 'ஞானபானு' இதழில் பாரதியார் எழுதிய கவிதைகளும் கட்டுரைகளும் இதற்குச் சான்று.

பாரதி அறுபத்தாறு இந்தக் காலக்கட்டத்தில் எழுந்த நூல். குவளைக் கண்ணனிடம் பாரதியார் ஆழ்வார்கள் பன்னிரண்டு பேர் நாலாயிரம் பாடியிருந்தால் நான் ஒருவனே ஆயிரம் பாடுவேன் என்று பாடத் தொடங்கினாராம். அறுபத்தாறுடன் நின்று போயிற்று.

பாரதியாரின் தன் வரலாற்றுக் குறிப்புகள் தமிழ்மொழிக்குப் புதிய இலக்கிய வகையை அறிமுகம் செய்கின்றன.

கண்ணம்மா என் காதலி என்ற தலைப்பில் அமைந்துள்ள 'யோகம்' ஓர் அழகான சிந்தனைப் பாடலாகும். ஒன்றைவிட்டு ஒன்று பிரிக்கமுடியாத பொருட்களைக் கையாள்கிறார்.

*பாயுமொளி நீ எனக்கு*
*பார்க்கும் விழி நானுனக்கு*

என்கிறார். மேலும்,

*எண்ணி யெண்ணிப் பார்த்திடிலோர்*
*எண்ணமில்லை நின்சுவைக்கே*
*கண்ணின் மணி போன்றவளே!*
*கட்டியமுதே! கண்ணம்மா!*

. . . . . .

*செல்வமடி நீ யெனக்கு*
*சேமநிதி நானுனக்கு*

. . . . . .

*தாரையடி நீயெனக்கு*
*தண்மதியம் நானுனக்கு*

மகாகவி பாரதி தமிழ்க் கவிதையில் ஒரு புதிய மாற்றத்தை ஏற்படுத்தியவர். சமூகத்தின் தேவைக்கேற்பக் கவிதை அமைத்தவர். கவிதைக்கும் சமூகத்திற்கும் இடையே உள்ள உறவை வலுப் படுத்தியவர். சமூகக் கோட்பாடுகளில் தெளிவான நோக்கங்களும் அணுகுமுறைகளும் கொண்டிருந்ததைப் போலவே கலைகளைப் பற்றியும் கலைகளுக்கும் தனிமனிதனுக்கும் கலைகளுக்கும் சமூகத்திற்கும் இடையே உள்ள உறவுநிலைகளைப் பற்றியும் பாரதிக்குத் தெளிவான பார்வை இருந்தது.

**இலக்கணமும் பாரதியும்**

*அருமையான உள்ளக் காட்சிகளை எளிமை*
*கொண்ட நடையிலே எழுதுவது நல்ல கவிதை*

என்று கவிதைக்கு இலக்கணம் வகுக்கிறார் பாரதியார்.

*கூடியவரை பேச்சுத் தமிழிலேயே எழுத வேண்டும்.*
*வாய்க்கு நன்றாக வழங்குகிறதா என்று வாசித்துப்*
*பார்த்துக் கொள்ளுதல் நல்லது*

என்று வாய்மொழி இலக்கியத்திற்கு இலக்கணம் வகுக்கும் பாரதியார் கடந்தகாலப் புகழைப் பாடினார். நிகழ்கால நலிவைச் சாடினார். வருங்காலத்தை வாழ்த்தினார்.

பேச்சு வழக்கிலுள்ள இலக்கண அமைப்புகள் எழுத்து வழக்கிற்கு வரும்போது (dialectic representation) அதனைத் தரப்படுத்தி, பாரதியார் தமது கவிதைகளில் படைத்துக் காட்டியுள்ளார்.

**இறந்தகால வினைமுற்று**

| | **எழுத்து வழக்கு** | **பேச்சு வழக்கு** | **பா.ப.எ.வ.** |
|---|---|---|---|
| | *– ற் –* | *– ச் + இ –* | *– ச் – + உ (து)* |
| எ.கா. | *போயிற்று* | *போச்சி* | *போச்சுது* |

**துணை வினையமைப்பு – 1**

*முதல் வினையின் இ.வி.எ. வடிவம் + துணைவினை*

| எ.கா. | *கண்டுவிட்டாய்* | *கண்டுட்டே (பார்த்துட்டெ)* | *கண்டிட்டாய்* |
|---|---|---|---|

**ஏழாம் வேற்றுமை அமைப்பு**

| | *– இல் –* | *– லெ –* | *– லே –* |
|---|---|---|---|
| எ.கா. | *கானத்தில்* | *கானத்துலெ* | *கானத்திலே* |

**நிகழ்கால முற்று வினையமைப்பு**

| | *– கின்று –* | *– ø –* | *– ø –* |
|---|---|---|---|
| எ.கா. | *காற்றடிக்கின்றது* | *காத்தடிக்குது* | *காற்றடிக்குது* |

**நிகழ்கால வினையமைப்பு விளிச்சொல்**

வினைமுற்று (கின்று) அடி.வி.மு. அடி வி.மு.(–கு)

வினை அடி

| எ.கா. | *தருகின்றதடி* | *தருதுடி* | *தருகுதடி* |
|---|---|---|---|

**துணைவினையமைப்பு – 2**

மு.வி. வேண்டும்

| எ.கா. | *தரவேண்டும்* | *தரவேணும்* | *தரவேணும்* |
|---|---|---|---|

**தொழிற்பெயர் துணைவினை**

| எ.கா. | *மறக்கலானேன்* | *மறந்துருச்சி* | *மறக்கலாச்சு* |
|---|---|---|---|

**வியங்கோள்/ஏவல்**

வி.அடி/வி.மு. வி.உ./ஏ.உ.

| | *ஆக* | *– –* | *–குதி–* |
|---|---|---|---|
| எ.கா. | *செய்வாயாக* | *செய்* | *செய்குதி* |
| | *(முதல்வினை)* | *(எதிர்மறைச்சொல்)* | *(துணைவினை)* |

**துணைவினையமைப்பு – 3**

*மு.வி. (வி.எ.) + விடு*

| எ.கா. | *செய்துவிடாமல்* | *செய்யாம* | *செய்திடாமே* |
|---|---|---|---|

இவ்வாறு மக்களிடையே அன்றாட வழக்கிலுள்ள சொற்களைப் பாரதியார் தமது படைப்புகளில் கையாண்டு சொற்களுக்குப் புதிய ஆற்றலைத் தந்துள்ளதோடு அதன் மூலம் உணர்ச்சிகளையும் தந்துள்ளார். ஒவ்வொரு சொல்லையும் படிக்குந் தோறும் எளிமையாகவும் உணர்ச்சி தருவனவாகவும் இருப்பதைக் காணமுடிகிறது. இது வாழும் தமிழிலுள்ள சொல் சொல்லமைப்பு களின் பயன்பாட்டின் இயல்பைக் காட்டுவனவே என்றால் அது மிகையன்று.

**பாரதியின் உரைநடை**

பேசுவது போல் எழுதுவது தான் பாரதியின் உரைநடைச் சிறப்பு. உரைநடையின் அமைப்புப் பற்றிக் கூறும் பாரதியார்,

> *பேசுவது போல் எழுதுவதுதான் உத்தமம் என்பது என்னுடைய கட்சி. எந்த விஷயம் எழுதினாலும் சரி ஒரு கதை அல்லது தர்க்கம் ஒரு சாஸ்திரம், ஒரு பத்திரிகை விஷயம், எதை எழுதினாலும் வார்த்தை சொல்லுகிற மாதிரியாகவே அமைந்து விட்டால் நல்லது. பழக்கமில்லாமல் தனக்கும் அதிகப் பழக்க மில்லாத, ஒரு விஷயத்தைக் குறித்து எழுத ஆரம்பித்தால், வாக்கியம் தத்தளிக்கத்தான் செய்யும். சந்தேகம் இல்லை. ஆனாலும் ஒரு வழியாக முடிக்கும்போது வாய்க்கு வழங்குகிறதா என்று வாசித்துப் பார்த்துக் கொள்வது நல்லது என்றும் வசன நடை கம்பர் கவிதைக்குச் சொல்லியது போலவே தெளிவு, ஒளி, தண்மை, ஒழுக்கம் இவை நான்கும் உடையதாக இருக்க வேண்டும். இவற்றுள் ஒழுக்கமாவது தட்டு, தடையில்லாமல் நேரே பாய்ந்து செல்லும் தன்மை நமது தற்கால வசன நடையில் சரியான ஒட்டம் இல்லை. தள்ளாட்டம் அதிகமாகக் காணப்படுகிறது. உள்ளத்தில் தமிழ்ச் சக்தியை நிலைநிறுத்திக் கொண்டால் கை நேரான தமிழ்நடை எழுதும்.*

என்கிறார்.

தமக்கென்று ஒரு தனிவழியை அமைத்துக் கொண்டவர். மக்கள் கரங்களில் தான் எதிர்காலம் இருக்கிறது என்று கூறிய விவேகானந்தரை வழிகாட்டியாகக் கொண்டவர்.

பேச்சுநடையை ஒட்டிய எழுத்துநடை அமையவேண்டு மென்பதே பாரதியாரின் எண்ணம்.

*பேச்சு நடைக்கு ஏற்பவே தனது எழுத்து*
*நடையைப் பாரதியார் கையாண்டார்*

என்ற கருத்தே எங்கும் நிலவுகிறது.

உலகில் உள்ள அனைத்து மொழிகளிலும் தமிழ்மொழி மிக உயர்ந்ததாக இருக்கவேண்டும் என்று விரும்பினார்.

*தமிழ் வசனநடை இப்போதுதான் பிறந்தது. பல வருஷமாகவில்லை. தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும் ஆதலால் இப்பொழுதே நமது வசனம் உலகத்தில் எந்தப் பாஷையைக் காட்டிலும் தெளிவாக இருக்கும்படி முயற்சிகள் செய்ய வேண்டும்.*

மிகக் குறுகிய காலத்திற்குள்ளாகவே உரைநடைக் கலையில் கைதேர்ந்திருந்தார் பாரதியார்.

மிகச் சிறிய வாக்கியத்திலும் அவரது நடைத்திறமை சிறப்புற்றது.

*வஸந்த காலம். நள்ளிரவு நேரம். புரசைவாக்கம் முழுவதும் நித்திரையிலிருந்தது. இரண்டு சீவன்கள் தான் விழித்திருந்தன. நான் ஒன்று, மற்றொன்று அவள்.*

நெடிய வாக்கியங்களிலும் பாரதியாரின் தெளிவும் ஒட்டமும் சிறப்புற்றமைந்தன. 'சிதம்பரம்' என்ற கட்டுரையில் தெருவின் ஓசைகளைப் பட்டியலிடும் ஒரு நீண்ட வாக்கியம் இதற்கு எடுத்துக்காட்டு.

*வண்டிச் சப்தம், பக்கத்து வீட்டு வாசலில் விறகு பிறக்கிற சப்தம், நான்கு புறத்திலும் காக்கைகளின் குரல், இடையிடையே குயில், கிளி, புறாக்களின் ஓசை, வாசலிலே காவடி கொண்டு போகும் மணி*

*ஓசை, தொலைவிலிருந்து வரும் கோயிற் சங்கின் நாதம் தெருவிலே சேவலின் கொக்கரிப்பு, இடையிடையே தெருவில் போகும் ஸ்திரீகளின் பேச்சொலி, அண்டை வீடுகளில் குழந்தைகள் அழும் சப்தம், நாய் குரைக்கும் சப்தம், கதவுகளின் அடைத்துத் திறக்கும் ஒலி, வீதியில் ஒருவன் ஹீகும் என்று தொண்டையை லேசாக்கி இருமித் திருத்திக் கொள்ளும் சப்தம், தொலைவிலே காய்கறி விற்பவன் சப்தம், 'அரிசி, அரிசி' என்று அரிசி விற்றுக்கொண்டு போகிற ஒலி, இப்படி பலவிதமான ஒலிகள் ஒன்றன் பின் மற்றொன்றாக வந்து செவியில்படுகின்றன.*

பேச்சு நடைக்கு ஏற்ப உணர்ச்சிச் சொற்களை இடையிடையே சேர்த்து எழுதும் பண்பு பாரதியாரிடம் உண்டு.

1. அட, போ பழமொழிகளை நம்பி ஒழுக்கத்தை நடத்துவோம் என்று நினைப்பதும் பயனில்லை.
2. கிராமந்தோறும் சபைகள் கூடி, கூ, கூ என்று பெரிய சப்தம் போட வேண்டும்.
3. ஹோ ஹோ அடுத்த தடவை இங்கிருந்து காங்கிரஸ்காரர் இங்கிலாந்திற்கு ஸ்வராஜ்யம் கேட்கப்போகும்போது அங்குள்ள புருஷரைக் கெஞ்சினால் போதாது.

தம்மை ஒரு குரு ஸ்தானத்தில் வைத்துக் கொண்டு உபதேசிக்கும் முறையில் அல்லது கட்டளையிடும் முறையிலும் எழுதுவது உண்டு.

1. கவனி – நல்ல பச்சைத் தமிழில் சொல்லுகிறேன்.
2. வாருங்கள் மக்களே, வாருங்கள் அண்ணன் தம்பிமார்களே, வாருங்கள் உலகத்தீரே! கூட்டம் கூட்டமாக நேர்மை வழியில் புகுவோம்.

தனது நடையில் பழமொழிகளை இடையிடையே கலந்து எழுதுவதும் உண்டு.

1. இந்த விதிகளிலே மனித ஜாதியார் இன்றுவரை கற்றது கைமண்ணளவு கல்லாதது உலகளவு.

2. நாம் எத்தனை பெரிய வல்லரசாக இருப்பினும் நாம் ஒன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைக்கும் என்ற பழமொழியை மீறிச் செல்லுதல் இயலாது.

எதையும் மூன்று அல்லது நான்கு முறை அடுக்கிக் கூறுவதிலே பாரதியாருக்கு விருப்பம் மிகுதி என்று பாரதியார் உரைநடைத் திறன் குறித்து ஆய்வாளர் இரா. மோகன் எடுத்துக் காட்டுகின்றார். பேச்சு நடையில் ஓர் இயல்பை அடுக்கிக் கூறும்போக்கு இதனை அழுத்தமும் செறிவும் நிரம்பப் பாரதியார் கையாளுகின்றார்.

'மஹா' என்ற சொல்லைப் பாரதியார் எவ்வாறு அடுக்கித் தருகிறார் என்பதற்கு இரண்டு எடுத்துக்காட்டுகளைக் காணலாம்.

*மஹம்மது நபி மஹா சுந்தர புருஷர், மஹா சூரர், மஹா ஞானி, மஹா பண்டிதர், மஹா பக்தர், மஹா லௌகீக தந்திரி.*

*ஸ்தூல அணுக்களும் ஸூஷ்ம அணுக்களும் ஸதா மஹா வேகத்துடன் இயங்கிய வண்ணமாகவே உள்ளன. மஹா மஹா மஹா. . .*

ஒரே பொருளமைந்த பல சொற்களை அமைத்தலும் உண்டு.

*இது பெரிய தொல்லை, உபத்திரவம், தொந்தரவு, கஷ்டம், சங்கடம், ஹிம்சை, தலைநோவு*

வாசகனை மனத்திலே இருத்தி அவனுக்கும் எழுதும் பொருள் விளங்கும்படி உரைநடை அமையவேண்டும் என்று பாரதியார் கருதினார். அவர் கருத்துப்படி பழக்கமில்லாத ஒரு செய்தியைக் குறித்து, அதாவது மக்களுக்குச் சற்றேனும் பழக்கமில்லாமல் தனக்கும் அதிகம் பழக்கமில்லாத ஒன்றைக் குறித்து எழுத ஆரம்பித்தால் வாக்கியம் தத்தளிக்கத்தான் செய்யும், சந்தேகமில்லை. ஆனாலும் ஒருவழியாக முடிக்கும்போது வாய்க்கு வழங்குகிறதா என்று வாசித்துப் பார்த்துக் கொள்வது நல்லது.

இத்தனை அக்கறை வாக்கியத் தெளிவிலும் பொருள் தெளிவிலும் கொண்டவராதலால் அவரது கட்டுரைகளில் பல இடங்களில் சொற்பொருள் விளக்கம் செய்யும் வழக்கத்தை அவர் மேற்கொண்டிருக்கப் பார்க்கலாம்.

1. **தைரியம்** – தீரனுடைய இயற்கை தைரியம்
2. **அல்லா** – அரபி பாஷையில் 'அல்லா' என்ற பதத்திற்குக் கடவுள் என்று அர்த்தம்.
3. **நம்பூரி** – நம்பூரி என்றால் 'நம்பிஸ்ரீ' என்ற பட்டத்தின் திரிதல் விகாரம்.
4. **தேவர்** – தேவர் என்ற மொழி 'திவ்' என்னும் பகுதி யினின்றும் தோன்றியது. 'திவ்' என்றால் 'ஒளி வீசு' என்பது பொருள்.

பாரதியாரைப் புகழாத கவிஞர்கள் இல்லை. கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, 'பாரதியும் பட்டிக்காட்டானும்' என்ற பாடலில் கேட்டவுடனேயே பொருள் விளங்கும் பாரதியின் பாடல் தன்மையைப் பாராட்டி இருக்கிறார்.

பாரதிதாசன் தமது எளிமை நடையால் தமிழ் இலக்கியத்தை வளப்படுத்தும் நோக்கத்தோடு 'பாண்டியன் பரிசு' இயற்றினார்.

பாரதியாரைத் தொடர்ந்து எளிய உரைநடை அமைப்பு, கவிதை அமைப்பு வளர்ந்தன.

பாரதியாரின் இளமைக்கால நண்பரும் 'நாவலர்' என்று அழைக்கப்பட்டவருமான திரு. சோமசுந்தர பாரதியார், பாரதி மலர் ஒன்றில்,

> *'கம்பருக்குப் பிறகு தமிழ்ப்பாக்களிலே கற்பனையை வாய்மை வரம்பு இகவாமல் இயற்கையோடு முரணாமல் நிற்க வைத்த நற்புலவர் பாரதியார். இளங்கோவின் எளிய இனிய ஒழுகுநடை எழில் வளமும் வள்ளுவரின் கொள்ளரிய உண்மையறத் திட்பமொடு அறிவு தரு ஒட்பம் மிளிர் பொருள் ஒளியும் வாய்ந்த தமிழ்ப்பா மழையை வழங்கும் கொண்டல்'*
>
> *பழந்தமிழில் புத்தொளியும் செத்துவரும் புலமைக்குப் படைத்துதவி, இறவாத தமிழியல்பைத் தண்கவிகள் சான்று சொலப் புலமையறம் ஆற்றியவர் பலர் மறந்து புறக்கணித்த*

*தமிழணங்கின் சீர் இளமைத் திறம் வியந்து பாராட்டி, பாப்பாப் பாட்டால் அவள் மழலை மிழற்றவைத்து, நாட்டுப்பாட்டால் நல்லிளமை வளம் காட்டி, முரசாலே விடுதலை போர்ப்பறை முழக்கி அடிமையுற அறிவிழந்து உணர்விழந்து, உறங்கிய தமிழர்களைத் துயிலுணர்த்திக் குயில்பாட்டாய்ப் பண்ணிசைத்துக் கண்ணன் 'பா' அமுதருந்தி, பாஞ்சாலி சூளுரையால் தணியாத விடுதலையின் தாகத்தை அவர்க்கெழுப்பி, வீரராக்கி, வெற்றி விளைத்து, குறவையாடி பள்ளுப்பாடப் பண்ணிய பாவலர் பாரதியாரைப் பார்ப்பனத் தமிழர் என்பதிலும் தமிழ்ப் பார்ப்பனர் என்பதே சாலப் பொருந்தும்.*

1918இல் சுதேசமித்திரன் இதழில் அவர் எழுதிய கட்டுரையில் தமிழ்த்தலைப்புடன் கூடவே ஆங்கிலத் தலைப்பையும் வெளியிடுவதை,

*காயிதப் பஞ்ச காலம்; என்ன அநாவசியம் பார்த்தீர்களா!*

என்கிறார்.

**செய்யுளை உரைநடைப்படுத்திய பாரதியார்**

பதஞ்சலி யோகசூத்திரம், பகவத் கீதை, வேத ரிஷிகள் கவிதை. இவை யாவும் செய்யுள் வடிவில் அமைந்தவை. செய்யுள் வடிவ வேதங்கள் புரிந்துகொள்ளக் கடினமாக இருக்கும் என்பதால் பாரதியார் அவற்றை உரைநடையில் அமைத்தார். செய்யுள் வடிவ நடையை உரைநடைப்படுத்தும் பொழுது பாரதியார் அதிக சமசுகிருதச் சொற்களைக் கையாண்டுள்ளார். இது பாரதியாரின் கருத்துக்கு மாறானது.

**ஆத்மாவின் நிலை கூறுவது:**

*ஒன்று அசைதலின்றி மனத்தினும் விரைந்து செல்வது. இதனை இந்திரியங்கள் எட்டியதில்லை. இது முன்னே சென்றுவிடும். மற்றவை ஓடும்போது தான் நின்றபடியே அவற்றை எட்டிவிடும். இதனிடத்தே வாயு செயல்களைச் சமைக்கின்றான்.*

சூத்திரங்களை விளக்கிக் கூறும்பொழுது இத்தகைய கடினநடையைப் பின்பற்றுவதில்லை. ஓரளவு படித்தவர்களும் எளிதில் புரிந்து கொள்ளும் வண்ணம் உள்ளது. வினாவிடை அமைப்பில் அமைத்துள்ளார்.

*கண்ணபிரான் மனிதருக்குள் ஜாதி வேற்றுமையும் அறிவு வேற்றுமையும் பார்க்கக் கூடாதென்பது மட்டுமேயன்றி எல்லா உயிர்களுக்குள்ளேயும் எவ்வித வேற்றுமையும் பாராதிருத்தலே ஞானிகளுக்கு லக்ஷணமென்று சொல்கிறார்.*

**பேச்சு வழக்குச் சொற்கள்**

பாரதியார் தமது உரைநடையில் பேச்சு வழக்குச் சொற்களைப் பயன்படுத்தியுள்ளார்.

| | |
|---|---|
| *அப்பன்* | *நிச்சயத்தாம்பூலம்* |
| *இராவு* | *பட்சணம்* |
| *கண்ணாலம்* | *பட்டாணித்துருக்கம்* |
| *காயிதம்* | *பயல்கள்* |
| *சங்கதி* | *பயித்தியம்* |
| *சம்பளம்* | *பிச்சைச் சிறுக்கி* |
| *சவுரியம்* | *பிஸ்கோத்து* |
| *சிப்பாய்* | *பின்னே* |
| *சிலவு* | *பெண்டாட்டி* |
| *செட்டிச்சியம்மா* | *பொட்டி* |
| *சென்னப்பட்டனம்* | *பொதிமாடு* |
| *சோம்பேறி* | *வக்கீல்* |
| *துஷ்டப்பயலே* | *வெறுமே* |

போன்ற வழக்குச் சொற்கள் பாரதியாரின் உரைநடையில் இடம்பெற்றுள்ளன.

**தொடரமைப்பில் பேச்சுச் சொற்கள்**

சொற்கள் மற்றும் தொடர்களிலும் பேச்சு வழக்குகளைக் கையாண்டுள்ளார். எ.கா.

| | |
|---|---|
| *இங்கிருந்து போம்* | *சவுத்திலே* |
| *இறங்கி வாரும்* | *சாவகாசமில்லே* |
| *ஏங்காணும்* | *தானிய தவசம்* |
| *கஞ்சா அடிக்கிறது* | *தொண்டை விக்குமோ* |
| *குட்டிச்சுவராக* | *மாசப்பொருத்தம்* |
| *சந்தியிலே* | *மூன்றாவது மெத்தை* |

போன்ற பேச்சு வழக்குச் சொற்களைப் பயன்படுத்தியுள்ளார்.

அரசியல், பொருளாதாரம், கல்வி, விஞ்ஞானம், சீர்திருத்தம், சமூகவியல் போன்ற அனைத்துத் துறையிலும் தமிழ் பரவவும் உரைநடை சிறக்கவும் பெருந்தொண்டு புரிந்தவர் பாரதியார். மிக எளிய நடையில் தான் நினைத்த கருத்தைப் புரியவைத்தவர்.

பாரதியார் கவிதை எழுதுவதற்கு முன்பு கட்டுரைகளைத் தான் படைத்தார் என்கிறார் சிவஞானம்.

> *அவர் (பாரதி) சில கருத்துகளை முதலில் கட்டுரைகளாகத் தந்துவிட்டு, பின்னரே அவற்றைக் கவிதைகளாகவும் படைத்திருக் கிறார். அவருடைய கவிதைகளையும் கட்டுரை களையும் அவை படைக்கப்பட்ட காலத்தை யொட்டி ஆராய்ந்து பார்த்தால் இந்த உண்மை விளங்கும்*

என்கிறார்.

பாரதியார் கவிதைகளைப் பற்றி ஆய்வு நூல் வருவதைப் போல உரைநடைகளைப் பற்றி வருவது குறைவாக உள்ளது.

### பாரதி படைப்பில் வடமொழி எழுத்துகள்

வடமொழிச் சொற்கள் மிகப் பரவலாகக் கையாண்ட காலமாதலால் பாரதியாரும் வடமொழி எழுத்துகளைக் கையாண்டார். பாரதியார் கையாண்ட புதிய வடமொழி எழுத்துக்களாவன: ஸ ஷ ஹ ஜ என்ற ஐந்து எழுத்துகளையும் மெய் எழுத்துகளையும் உயிரெழுத்தோடு சேர்த்து உயிர்மெய் எழுத்தாகவும் கையாண்டுள்ளார். எ.கா.

| | | | |
|---|---|---|---|
| *ஸ்* | *– நாஸ்திகர்* | *ஹீ* | *– ஹீனர்கள்* |
| *ஸ* | *– உபாஸனை* | *ஜ்* | *– ஜ்வரம்* |

| | | | | |
|---|---|---|---|---|
| *ஸா* | – *ஸாதாரணம்* | | *ஜ* | – *ஜபித்து* |
| *ஸூ* | – *ஸூஷ்மம்* | | *ஜா* | – *ஜாதி* |
| *ஷ்* | – *இஷ்டம்* | | *ஜி* | – *ஜில்லா* |
| *ஷ* | – *நிமிஷம்* | | *ஜீ* | – *ஜீவகோடிகள்* |
| *ஷி* | – *சம்பாஷித்தோம்* | | *ஜு* | – *ருஜூப்படுத்து* |
| *ஷோ* | – *ஷோக்* | | *ஜெ* | – *ஜெயிலுக்கு* |
| *ஷை* | – *பாஷை* | | *ஜோ* | – *ஜோதி* |
| *ஹ்* | – *பிரஹ்மணஸ்பதி* | | *ஜை* | – *பூஜை* |
| *ஹ* | – *சந்தேஹம்* | | | |
| *ஹா* | – *மஹாஜனம்* | | | |
| *ஹி* | – *ஹிந்துஸ்தானம்* | | | |

முதலியன. தமிழ் இலக்கணப்படி மெய்யெழுத்துக்கள் மொழி முதலில் வாரா. ஆனால் பாரதியார் தனது உரைநடையில் மொழி முதல் மெய்யெழுத்துகளைப் பயன்படுத்தியுள்ளார். இவை வடமொழிச் சொற்களில் வருகின்றன.

எ.கா.

| | |
|---|---|
| *க்* | – *க்ருஹப்பிரவேசம்* |
| *த்* | – *த்ருஷ்டாந்தம்* |
| *ப்* | – *ப்ரார்த்தனை* |
| *வ்* | – *வ்யாசம்* |
| *ஸ்* | – *ஸ்திரி* |
| *ஜ்* | – *ஜ்ஹம்* |
| *ஹ்* | – *ஹ்ருதயம்* |

முதலியன. மொழி முதலில் வரக்கூடாத சில உயிர்மெய் எழுத்துகளையும் பாரதியிடம் காணலாம். எ.கா.

| | |
|---|---|
| *ட* | – *டம்பம்* |
| *ர* | – *ரகஸ்யம்* |
| *ல* | – *லஜ்ஜை* |
| *ய* | – *யஜமான்* |
| *ரு* | – *ருத்ரன்* |
| *லோ* | – *லோபம்* |

முதலியன.

மொழி முதலில் வாராத சில மெய்யெழுத்துக்களும் பாரதி நடையில் வரும். எ.கா.

*க் – ஸமத்துக்*
*ட் – பிரசிடெண்ட்*
*த் – பந்தோபஸ்த்*
*ந் – அர்யமந்*
*ப் – போனகிராப்*

இதுபோன்றே இலக்கணத்தில் அடங்காத புதுமெய் மயக்கங்களும் புது அசைகளும் பாரதி உரைநடையில் காணலாம்.

பாரதியாரின் உரைநடையில் மோனைச் சொற்கள் அதிகம் இடம்பெற்றுள்ளன.

*அஸாதாரண அலௌகீ அந்தகார நடை எங்கும் எப்போதும் எதனினும் காணாமல் வருந்து கின்ற மானிடன் பெட்டி போடுகிற பெருங் கூச்சல்தான் என காதுக்குப் பெரிய கஷ்டமாகத் தோன்றுகிறது.*

**ஒலிக்குறிப்புச் சொற்கள்**

பாரதியாரின் உரைநடையில் வியப்பைக் குறிக்கும் சொற்களும், ஒலியைக் குறிக்கும் சொற்களும் பரவலாகக் காணப்படுகின்றன. எ.கா.

*மற்ற தேசங்களில் எப்படியானாலும் இங்கே பெண்ணுக்குள்ள தைரியமும், புத்தியும் ஆணுக்குக் கிடையாது. இங்கிலாந்தில் பெண்கள் ஆண் பிள்ளைகளை வசப்படுத்தி எவ்வளவு சுலபமாகச் சீட்டு வாங்கிவிட்டார்கள். 'ஹோ, ஹோ' அடுத்து இங்கிருந்து காங்கிரஸ் காரர் இங்கிலாந்திற்கு ஸ்வராஜ்யம் கேட்கப் போகும்போது அங்குள்ள புருஷரைக் கெஞ்சினால் போதாது. ஸ்திரிகளைக் கெஞ்ச வேண்டும்.*

**பாரதி கண்ட தமிழ்மொழி வழி**

'பாட்டுக்கொரு புலவன் பாரதி' என்பது கவிமணியின் கணிப்பு. இதில் மாற்றுக்கருத்து எவருக்கும் இருந்ததில்லை.

பாரதியாரின் பெருமையைக் குறித்து ஜீவானந்தம் கூறுகையில்,

*பாரதி ஒரு தமிழனாக இருந்து, உலகத்தில் பாரதத்தின் தமிழகத்தின் புரட்சிகரமான புதிய சக்தியைப் பிரதிநிதிப்படுத்தினான். ஆகவே, பழைய முறைகளில் அழுந்தி அகழியில் விழுந்த முதலைக்கு அதுவே வைகுந்தம் என்று வாழும் தமிழ்ப்புலவர்கள் பாரதியைச் சரியாக அறிய முடியாமல் இருந்தார்கள்; இன்றும் இருக்கிறார்கள்.*

**பாரதியாரின் இஸ்லாமியப் படைப்புகள்**

இஸ்லாமிய நோக்கில் பாரதியார் பல்வேறு படைப்புக்களை வழங்கியுள்ளார். 'இஸ்லாம் மார்க்கத்தின் மகிமை', 'நமது முகம்மதிய சகோதரர்கள்', 'முகம்மதிய ஸ்தீரிகளின் நிலைமை', 'ஹிந்து முகம்மதிய ஒற்றுமை போன்ற தலைப்புக்களில் கட்டுரைகளை எழுதியுள்ளார்' மேலும் இஸ்லாமியக் குடும்பப் பின்னணியில் 'ரெயில்வே ஸ்தானம்' என்று சிறுகதை ஒன்றையும் வழங்கியுள்ளார். பாரதி படைத்த இலக்கிய வகைகளாவன:

*1. தனிப்பாடல்கள் 2. காப்பியம்*
*3. நாடகம் 4. பஞ்சகம்*
*5. தசாங்கம் 6. நவரத்தினமாலை*
*7. நான்மணிமாலை 8. ஆத்திசூடி*
*9. திருப்பள்ளியெழுச்சி 10. சீட்டுக்கவி*
*11. வசன கவிதை 12. கட்டுரை*
*13. நாவல் 14. சிறுகதை*
*15. சுயசரிதை 16. பிரயாண நூல்*

போன்றவையாகும். இவை தவிரச் சிந்து, பள்ளு, கும்மி போன்ற இலக்கியங்களின் தாக்கம் இருப்பதையும் காணலாம்.

பாரதி படைத்த இலக்கிய வகையைப் பொறுத்து அவற்றை,

1. *செய்யுள் வடிவிலமைந்த இலக்கியங்களைப் படைப்பது*
2. *உரைநடையில் அறிமுகமான இலக்கிய வகைகளைப் படைப்பது*
3. *தாமே புதிதாக இலக்கிய வகைகளைப் படைப்பது*

என்று வகைப்படுத்தலாம்.

ஒரு சமயம் தமிழ்ப் பயிற்சி மிக்க காந்திமதிநாத பிள்ளை என்பவர் 'பாரதி சின்னப்பயல்' என்ற இறுதி அடியைக் கொடுத்து அதைக் கொண்டு வெண்பா ஒன்றைப் பாடும்படி பாரதியாரைக் கேட்டார். பாரதியார் சிறிது நேரத்திற்குள் ஒரு வெண்பாவைப் பாடினார். அதன் இறுதியில் 'காந்திமதி நாதனைப்' என்றமைத்து,

*..... காந்திமதி நாதனைப்*
*பார் அதி சின்னப்பயல்*

என்று பாட்டை முடித்தார்.

எத்தகைய திறமை பெற்ற நாடாக இருந்தாலும் மொழி சிறப்படையவில்லை என்றால் அந்நாடு சிறப்படையாது.

*இமயமலை போலுயர்ந்த*
*ஒருநாடும் தன்மொழியில்*
*தாழ்ந்தால் வீழும்*

என்ற வரிகள் மேற்கண்ட கருத்தை வலியுறுத்துகின்றன.

தமிழ்மொழிக்கு நிகர் எதுவும் இல்லை என்கிறார் சே. இராசேந்திரன்.

*அரியாசனமுனக்கே யானாலுனக்குச்*
*சரியாரு முண்டோ தமிழே*

தமிழின் சிறப்பைக் கூறுகையில்,

*பிற எம்மொழியாயினும் நாகரிக மிக்கது தமிழ்*

ஐரோப்பா போன்ற நாடுகளில் தமிழ் பரவியதற்குக் காரணமாக அறிஞர் கூறுகையில்,

*தமிழ் இலக்கியம் எதையும் சார்ந்திருப்பதன்று கலாச்சார உபயோகத்தில் அது தனித்து இயங்க வல்லது இந்திய இலக்கியங்கள் பற்றி இந்தியாவிலிருந்தே அதுவும் திராவிடர் மூலம் முக்கியமாகத் தமிழ், மலையாளம் பேசும் மக்கள் மூலம்தான் ஐரோப்பாவில் அறிய முடிந்தது.*

# இன்றைய கல்வியில் தமிழின் தேவை

பாரதியார் தாம் வாழ்ந்த காலத்தில் நாட்டு விடுதலைக்காக ஓயாது பாடுபட்டார். விடுதலைக்குப் பிறகு என்ன முன்னேற்றம் அடைய வேண்டும் என்பது பற்றியும் கூறியுள்ளார்.

விடுதலைக்குப் பிறகு முன்னேற்றம் அடைய வேண்டுமென்றால் மக்கள் கல்வி அறிவு பெறவேண்டும் என்கிறார்.

பொறியியல் துறைகளில் முன்னேறக் கட்டாயம் சிறந்த கல்வி அறிவு தேவைப்படுகிறது.

காலத்திற்கேற்ப மொழியும் சொற்களும் மாறிவந்தாலும் பழைய நூல்களைக் கற்ற புலவர்கள் சாதாரணச் சொற்களை உபயோகித்து எதையும் படைக்காமல் செயற்கையாகக் கடுமையான நடையில் எழுதினர். அதையே தமது கல்வியின் சிறப்பு என்றும் கருதினார்கள்.

**கல்வி**

கல்வி என்ற சொல் மிகவும் பழமையானது. இன்று வழக்கில் இருக்கும் இலக்கியங்கள் எவ்வளவு பழமையானவையோ அத்தகைய பழமை வாய்ந்தது.

உலகில் எந்த மூலையிலும் நடக்கும் வளர்ச்சியை, மாற்றத்தை உடனுக்குடன் காணவும் அதைத் தனது மொழியில் அமைத்துச் சொந்தமாக்கிக் கொள்ளவும் வேண்டும்.

**பாரதியின் கல்விக் கொள்கை**

மொழி அடிப்படையில் நாட்டைப் பார்க்கவேண்டும் என்ற கருத்தில் பாரதியார் பிறழாமல் இருந்தார்.

பிறந்தது முதல் இறக்கும்வரை தம்மை உயர்த்திய தமிழ்மொழியின் மீது தீராத பற்றுக் கொண்டிருந்தார். தமிழ் மொழியில் உள்ள கலைச்சொற்களையும், அறிவியல் சொற்களையும் புதுப்பிக்க வேண்டுமென்று விரும்பினர்.

தமிழ்மொழி மூலம் கல்வி கற்றுத்தர வேண்டுமென்று விரும்புகிறார்.

'தமிழ்தான் பயிற்றுமொழியாக இருக்க வேண்டும்' என்பதே பாரதியாரின் கல்விக்கொள்கை என்றும் கூறலாம்.

> *தேச பாஷை மூலமாகவே சரித்திரம் மற்றெல்லாப் பாடங்களும் கற்பிக்கப்பட வேண்டும். தேச பாஷையின்மூலம் பயிற்றப் படாத கல்வி தேசிய கல்வியென்று பெயர் சொல்லுதல் பொருந்தாது போய்விடும் தமிழ்நாட்டிலே தமிழ் சிறந்திடும். பாரத தேசம் முழுதினும் எப்போதும் போலவே வடமொழி வாழ்க*

என்று பாரததேசம் முழுவதும் உள்ள அனைத்துத் தாய்மொழி மீதும் உள்ள தமது கருத்தைத் தெரிவிக்கிறார்.

தேசிய மொழிகள் மீது அவர் கொண்ட அக்கறையும், அவரது பரந்த தேசியக் கோட்பாட்டையும் இதன்மூலம் நம்மால் அறியமுடிகிறது.

பாரதியாரின் கல்விக் கொள்கையின் மூலம், அவர் பாரதத்தின் அனைத்து மக்களும் எல்லாத் துறையிலும் முன்னேற வேண்டும் என்ற அவரது விருப்பத்தை அறியமுடிகிறது.

### பெண்கல்வி

ஆண்கள் பெண்களை அடிமைப்படுத்துவதைக் கண்டு கொதிப்படைந்த பாரதியார் அந்நிலை மாறப் பெருவிருப்பம் கொண்டிருந்தார். பெண்கள் தங்களது அடிமைத்தளைகளை உடைத்தெறிந்து வெளியில் வந்து புதிய சரித்திரம் படைக்க வேண்டுமென்று முழங்கினார். புதுமைப் பெண்களாக, புரட்சிப் பெண்களாக விளங்கவேண்டுமென்று விரும்பினார்.

> *ஸ்திரியின் முக்கியக் கடமை, தாம் தேச மக்களுக்குத் தாய் என்பதை நன்றாக அறிந்து தமது புத்திரர்களும், பெண்களும் ஒழுக்கம், அறிவு, கல்வி, செல்வம் என்பவற்றிலே சிறந்து விளங்குமாறு தாம்*

*செய்வதற்குரிய தகுதியடைவதன் கண்ணே அரிய ஆவல் கொண்டவர்களாகி அவ்விஷயத்தில் தம்மால் கூடியவரை முயற்சி புரிய வேண்டும்.*

என்று தமது விருப்பத்தைக் கூறுகிறார்.

பெண்களுக்குக் கல்வி எந்த அளவிற்கு அவசியமானது என்று கூறுகையில்,

*ராஜாங்க சுதந்திரங்கள் ஸ்திரிகளுக்கு வெகு முக்கியமானவையல்ல. அநாகரிக மனிதர்கள் அவர்களை இழிவாக நடத்தாமல் பாதுகாத்துக் கொள்வது அவர்களுக்கு இப்போது முக்கியமாக வேண்டியது. இந்த விஷயம் நிறைவேற வேண்டுமானால் அதற்கு மூன்றுவிதமான உபாயங்கள் இருக்கின்றன. முதலாவது உபாயம் கல்வி, இரண்டாவது உபாயம் கல்வி, மூன்றாவது உபாயமும் கல்வியே. அதாவது கல்வியைத் தவிர வேறெல்லா விதமான உபாயமும் சிறிதேனும் பயன் படாதென்பது கருத்து*

என்று கூறுகிறார்.

*துருக்கி, பர்மா போன்ற தேசங்களிலுள்ள பெண்கள் குழந்தைப் பிராயத்திலேயே பாடசாலைகளில் போய் எழுதப் படிக்கக் கற்றுக் கொள்கிறார்கள்.*

அதேநிலைமை தமிழ்நாட்டில் உருவாகவேண்டும் என்று விரும்புகிறார் பாரதியார்.

## தாய்மொழி வழியே நேர்வழி

ஆங்கிலேயன் உலகத்தின் எந்த மூலைக்குச் சென்றாலும் அங்குத் தனது மொழியை ஆதிக்கம் செய்ய வைத்துவிடுகிறான்.

தனது மொழியைப் பரப்பிவிடுகிறான். இந்திய நாட்டிலிருந்து சென்ற பிறகும், அவனது மொழியான ஆங்கில மொழியைப் பரப்ப ஆண்டுதோறும் கோடிக்கணக்கில் செலவழித்து வருகிறான். இன்றும் வானொலியிலும், தொலைக்காட்சியிலும் ஆங்கில மொழிப் பாடம் நடந்து வருகிறது.

ஆனால் தமிழன் தனது மொழியை வளர்க்க வேண்டுமென்று எண்ணம் கூட இல்லாதவனாக விளங்குகிறான். தமிழன் இமயத்தில் தன் இலச்சினையைப் பொறித்தவன். கடாரம், சாவகம் வென்றவன். எகிப்து, ரோம் போன்ற பல நாடுகளுடன் வாணிகத் தொடர்பு கொண்டவன். இங்கெல்லாம் தமிழை வளர்க்க வேண்டுமென்ற எண்ணமிருந்திருந்தால் இன்றைய நிலையில் தமிழ் உலகமொழியாக விளங்கிக் கொண்டிருக்கும். இந்த நிலையிலிருந்து தவறியதால் தமிழன் பாமரனாக உலகமெலாம் இகழும் வகையில் இருந்துவருகிறான். இதற்காகவே பாரதியார் தமிழ்மொழியின் சிறப்பை, மொழியை உலகம் முழுவதும் பரப்ப வேண்டும் என்ற தனது விருப்பத்தைத் தெரிவிக்கிறார்.

> *தாய்மொழியின் சிறப்புப் பற்றி மணிமேகலை என்னும் காப்பியத்தில் நிகழ்ந்த ஒருசிறு நிகழ்ச்சியின் மூலம் காணலாம். சாதுவன் என்ற வணிகன் ஒருவன் மனிதர்களைக் கொன்று தின்னும் நாகர்கள் என்ற கொடியவர்களிடம் சிக்கிக் கொண்டான். அவன் உயிர் பிழைக்க எண்ணியவன் அவர்களது தாய்மொழியாகிய நாகர்கள் பேசும் மொழியில் பேசினான். அதுகேட்டு நாகர்கள் வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தனர். அவனைக் கொல்லாது அவன் மீது அன்பு கொண்டனர். பொன்னும் பொருளும் கொடுத்து அவனைத் தமிழகத்திற்கு அனுப்பினர் என்ற செய்தி இக் காப்பியத்தின் வாயிலாக அறியமுடிகிறது.*

இதன் மூலம் தாய்மொழியின் சிறப்பை நன்கு அறியமுடிகிறது.

## தாய்மொழி

இயற்கை வழங்கிய செல்வங்களைத் தாயாகவும், பெண்ணாகவுமே நாம் உருவகித்துப் பார்க்கிறோம். நிலமடந்தை, நிலமகள், கலைமகள், நாமகள், பூமகள், தாய்நாடு என்ற அனைத்தும் பெண்மைக்கு ஏற்றமளிப்பதாகவே அமைந்துள்ளன. எனவேதான் தமிழைத் தந்தைமொழி என்று கூறாமல் தாய்மொழி என்று அழைக்கிறோம்.

ஒரு குழந்தையைப் பாலூட்டி, சீராட்டி வளர்ப்பது தாயே. அதனைக் கொஞ்சி, விளையாடி உறங்கவைப்பதும் தாயே. இதனைத் தந்தையர் தங்கள் வேலையாகக் கொள்வதில்லை. ஒரு குழந்தைக்கு முதன்முதலில் மொழியைக் கற்றுக்கொடுப்பது தாயே. குழந்தை கூறுகின்ற முதல் சொல் 'அம்மா' என்பதே ஆகும்.

இதனாலே தமிழைத் தந்தைமொழி என்று கூறாமல் தாய்மொழி என்று அழைக்கிறோம்.

தாய்மொழியைப் பெண்ணாக உருவகித்திருக்கும் ஒரு பாடலாவது:

*பொருப்பிலே பிறந்து தென்னன் புகழிலே கிடந்து சங்கத்*
*திருப்பிலேயிருந்து வைகை ஏட்டிலே தவழ்ந்த பேதை*
*நெருப்பிலே நின்று கற்றோர் நினைவிலே நடந்தோரென*
*மருப்பிலே பயின்ற பாவை மருங்கிலே வளருகின்றாள்*

என்ற இனிய பாடலில் தமிழ்மொழியைப் பெண்ணாக உருவகித்திருப்பதைக் காணலாம்.

## மொழியின் பெருமை

தமிழர்கள் தமிழ்மொழியின் பெருமையை உணர்ந்து கொள்ளாமல் இருப்பதற்கான காரணமாகப் பேராசிரியர் க. அன்பழகன் கூறும் விளக்கமானது:

*நம்முடைய இடத்திலே வாழ்கின்ற காரணத்*
*தால் நம்முடைய அருமைத் தாய் தந்தையை*
*விட்டுப் பிரிந்து வேறு இடத்தில் வாழாத*

*பிள்ளைக்குப் பெற்றோருடைய பெருமை தெரியாது.*

என்று கூறுகிறார்.

மொழி என்பது மக்களுக்குள்ளே இருக்கும் உறவை வளர்ப்பதோடு மட்டுமல்லாமல் ஓர் இனப்பற்றையும் வளர்ப்பதாக அமைந்துள்ளது.

*இப்பற்றை வளர்ப்பது தாய்மொழிக் கல்வியாகும். இனப்பற்றுக் காரணமாகத் தமிழரின் மொழி இனம் நாடு பற்றிய தமிழ்த் தேசிய உணர்வுக்கு வித்திட்டவர் பாரதியார்.*

தமிழ்மொழி பற்றி அறிஞர் அண்ணா கூறுகையில்,

*அவ்வப்போது தோன்றும் எண்ணங்கள் மட்டும் பெறுவது போதுமென்றால் எந்த மொழியில் கற்றுக்கொண்டாலும் அம் மொழியில் பேசலாம். ஆனால் விடுதலை உணர்ச்சி பெற அவ்வப்போது தோன்றும் உணர்ச்சி மட்டும் போதாது. அடிமைப்படு வதற்கு முன்பு உரிமை பெற்றவர்களாக இருந்தபோது உலகம் வாழ்ந்த போது அந்த மக்களின் முன்னோர்கள் எங்ஙனம் இருந்தனர் என்பது தெரிய வேண்டும். அது குறித்துப் பேச வேண்டும். பாரதியார் கூறியபடி எங்கள் தந்தையர் நாடென்ற பேச்சினிலே ஒரு சக்தி பிறக்குது மூச்சினிலே என்ற நிலை கிடைக்கும். அந்த நிலையை அவரவர் தத்தமது தாய்மொழி மூலமாகவே பெறமுடியும். எனவே தாய்மொழி காப்பாற்றப்பட வேண்டும்.*

தமிழ்நாட்டில் தாய்மொழியான தமிழைப் புறக்கணித்துவிட்டுப் பிறமொழியில் கல்வி கற்றலை முழுவதுமாக எதிர்க்கிறார்.

> *தேசத்தின் வாழ்வுக்கும், மேன்மைக்கும் தேசியக் கல்வி இன்றியமையாதது. தேசியக் கல்வி கற்றுக் கொடுக்காத தேசத்தைத் தேசமென்று சொல்லுதல் தகாது. அது மனிதப் பிசாசுகள் கூடி வாழும் விஸ்தாரமான சுடுகாடே யாம்*

என்பது பாரதியின் கருத்து.

**கல்வியும் மொழியும்**

கல்வியில் தாய்மொழிக் கல்வியின் அத்தியாவசியத்தைப் பற்றிக் கூறுகையில் பாரதியார்,

> *கல்வியைப் பற்றிக் கூறும்போது மாணவர் களுக்குத் தெரிந்த பாஷையைப் போதிக்க வேண்டும் என்றும், தேசபாஷை முறையே சிறந்தது என்றும் பாரதி கூறி யுள்ளார். வெளிநாட்டு அறிஞர்கள் எழுதிய அறிவியல் உண்மைகளைத் தமிழ் மொழியில் பெயர்த்திடல் வேண்டும் என்று கூறுகிறார் பாரதியார். இயன்றவரை தமிழ்ப் பெயர்களையே உபயோகிக்க வேண்டும் என்று கூறுகின்றார். தமிழ்ச் சொற்கள் இல்லாவிடில் வடமொழிச் சொற்களைப் பயன்படுத்தலாம். தமிழ், சமஸ்கிருதம் என்ற இரண்டு மொழி களிலும் பெயர் இல்லாவிடில் ஆங்கிலச் சொற்களை உபயோகிக்கலாம். ஆனால் குணம், செயல் போன்றவற்றின் தன்மைகளை ஆங்கிலத்தில் போதிக்கக் கூடாது என்று பாரதியார் கூறுகின்றார். ஏனெனில் தமிழ்மொழியில் கற்பித்தால்தான் மாணவர்கள் கருத்துக்களை எளிதில் புரிந்துகொண்டு தாங்களும் அத்தகைய அறிவியல் உண்மைகளைக் கண்டறிய முற்படுவார்கள்*

*என்று பாரதியார் எண்ணுவது இதன்மூலம்*
*வெளிப்படுகிறது எனலாம்.*

**மொழிக் கருத்துக்கள்**

பாரதிதாசன் தமிழின் பெருமையைக் கூறுகையில் தான் பிறந்தது, வளர்ந்தது அனைத்தும் தமிழ்மொழிக்காகவே என்கிறார்.

*பிள்ளை பிறந்தேன் யாருக்காக*
*பெற்ற தமிழ்மொழிப் போருக்காக*
*உள்ளம் இருப்பதும் தோள் இருப்பதும்*
*உயிர் நிகர் தமிழ்ச் சீருக்காக*

என்கிறார் மு. வரதராசன் அவர்கள்.

*தாய்மொழிதான் சிறந்தது என்கிறார். தாய்மொழியில்தான் பிழையில்லாமல் பேசவும் எழுதவும் முடியும் என்று உளநூல் அறிஞர் மொழி நூல் அறிஞர் பலரும் எடுத்துரைக்கின்றனர்.*

தனது தாய்மொழி மீது அனைவருக்கும் பற்று உண்டு என்கிறார் பாரதியார்.

*தனிநாடு தனிஅரசு என்று குறிக்கோள் கொள்ளாதவர்களும் தம்மொழி தாய் மொழி எனும் உணர்ச்சியை மதிக்கின்றனர். மொழி வளம் பெறாத நாடுகளும் பேரரசுகள் பிடியிலிருந்து தம்மை விடுவித்துக் கொண்டு தனி அரசுகளாகி உள்ளன.*

இதன்மூலம் மொழியின் வலிமையை உணரமுடிகிறது.

என் தாய்மொழி நாளை மடிவதாக இருந்தால்தான் இன்றே மடிந்துவிட விரும்புகிறேன் என்றார் உருசியக் கவிஞர் இரசூல்காம் கோடா. மேலும்,

*இனப்பற்றை வளர்ப்பது தாய்மொழிக் கல்வியாகும். இனப்பற்று காரணமாகத்*

*தமிழின் மொழி, இனம், நாடு பற்றிய தமிழ்த்*
*தேசிய உணர்வுக்கு வித்திட்டவர் பாரதியார்*

என்கிறார் சே. இராசேந்திரன்.

அண்ணா அவர்கள் மொழி பற்றிக் கூறுகையில்,

*தாய்நாடா? தாய்மொழியா? எனக் கேட்டால்*
*தாய்நாடு கூட வேண்டாம் தாய்மொழி தான்*
*வேண்டும்*

நாட்டு மக்களின் அறிவு வளர வளர அந்நாட்டின் மொழியும் வளரவேண்டும் என்கிறார் பாரதியார்.

*மனுஷ பாஷை மனுஷ வாழ்க்கையோடு*
*ஒட்டி உடன் வளர்ந்த பொருளல்லவோ?*
*தலைமுறை தலைமுறையாய் எத்தனையோ*
*நூற்றாண்டுகளாக ஒரு நாட்டார் பேசி வரும்*
*பாஷை அவர்களின் உயிரோடு ஒன்றி*
*விடுகிறது. மனித அறிவு வளர்ச்சிக்குப்*
*பாஷை ஒரு கண்ணாடி. ஒரு நாட்டாரின்*
*அறிவு வளர்ந்துகொண்டு வரவர அந்நாட்டின்*
*பாஷையும் விசாலம் அடைந்து வருகிறது*

என்ற கருத்து ஏற்றுக் கொள்ளக்கூடியதாக அமைந்துள்ளது.

**வளரும் தமிழ் இளந்தளிர்களுக்குத் தமிழ்ப்பால்**

இன்றைய நிலைமையில் மொழிக்கல்வி என்பது வெறும் பட்டம் பெறுவதற்குரிய, பணம் சம்பாதிப்பதற்கும் மட்டுமே உள்ளது. தவிர, சிறந்த பண்பாட்டைப் பெறவேண்டுமென்றோ, அறிவு பெற வேண்டுமென்றோ இன்றுள்ள கல்வியமைப்புகள் நினைப்பதில்லை.

ஆங்கில மொழியின் வரவு பற்றிய கருத்துக் கூறும் அன்னிதாமசு அவர்கள்,

*ஆங்கில முறைக் கல்வியின் உள்நுழைவு*
*காரணமாகப் பிரதேச மொழிக் கல்வி*
*முதன்மை இழந்திருந்தது. இந்நிலை இந்த*

*நூற்றாண்டின் 30, 40களில் தான் மாற்றம் கண்டது எனக் கூறலாம். மாநில மொழிகளின் வளர்ச்சி தாய்மொழியின் பாதுகாப்பு என்ற எண்ணங்கள் பாரதியார் போன்றோரிடம் வெளிப்பாட்டின் விரிவாக இதனைக் கருதலாம். இந்திய விடுதலைக்குப் பின் இக்கோட்பாடு வேகம் கொண்டதால் மொழிக்கல்வி வளர, தமிழ்க்கல்வியும் வளர்ந்தது; வளருகிறது. எனினும் ஓரிரு பல்கலைக் கழகங்கள் தவிரப் பல கல்லூரி களிலும் தமிழ்ப்பாடம் கற்பிக்கப்பட்டமை அறுபதுகளில் தான் தொடங்கியது எனலாம்*

என்கிறார்.

தமிழர்கள் தவறு நடப்பதைத் தட்டிக்கேட்கவும், நல்ல செயல்கள் செய்ய வேண்டுமென்றால் அவர்களுக்குத் தமிழ்மொழி மூலம் கல்வி கற்பிக்கப்பட வேண்டும். பாரதியார் தமக்களிக்கப்பட்ட ஆங்கிலப் பயிற்சியைப் பற்றிக் கூறுகையில்,

*நெல்லை யூர்சென்றவ் வூணர் கலைத்திறன்*
*நேரு மாறெனை எந்தை பணித்தனன்*
*புல்லை யுண்கென வாளரிச் சேயினைப்*
*போக்கல் போலவும் ஊன்விலை வாணிகம்*
*நல்ல தென்றொரு பார்ப்பனப் பிள்ளையை*
*நாடு விப்பது போலவும்*

என்று விமர்சிக்கிறார். மேலும்,

*அருமை மிக்க மயிலைப் பிரிந்துமிவ்*
*வற்பர் கல்வியி னெஞ்சு பொருந்துமோ*

என்றும் பேடிக்கல்வி என்று கூறி வருந்துகிறார்.

*முன்ன நாடு திகழ்ந்த பெருமையும்*
*மூண்டி ருக்குமிந் நாளி னிகழ்ச்சியும்*
*பின்னர் நாடுறு பெற்றியுந் தேர்கிலார்*
*பேடிக் கல்வி பயின்றுழல் பித்தர்கள்*

*என்ன கூறிமற் றெங்க னுணர்த்துவேன்*
*இங்கி வர்க்கென துள்ள மெரிவதே*

என்றும்,

*ஏதிலார் தரும் கல்விப் படுகுழி*

என்றும் ஆங்கில மொழிக்கல்வி பற்றிக் கூறுகிறார்.

விளம்பரங்கள் அனைத்தும் தமிழில் வெளியிடப்பட வேண்டும் என்று கூறும் பாரதியார் பள்ளிச்சாலைகளில் தமிழ் இருக்கவேண்டிய நிலை குறித்துக் கூறுகையில்,

*ஆரம்ப விளம்பரம் தமிழில் பிரசுரம் செய்ய வேண்டும். பாடசாலைகள் ஸ்தாபிக்கப் பட்டால் அங்கு நூல்களெல்லாம் தமிழ் மொழி வாயிலாகக் கற்பிக்கப்படுவது மின்றிப் பலகை, குச்சி எல்லாவற்றிற்கும் தமிழில் பெயர் சொல்ல வேண்டும். 'ஸ்லேட்', 'பென்சில்' என்று சொல்லக்கூடாது.*

ஆங்கிலத்தில் உள்ள சொற்கள், சொற்றொடர்களை அந்தந்தத் தாய்மொழியில் கற்பிக்க வேண்டும் என்று கூறுகிறார்.

*ஆரம்பப் பள்ளிக்கூடத்தில் உபாத்தி யாயர்கள் இங்கிலீஷ் புஸ்தகங்களைத் துணையாக வைத்துக்கொண்டு அவற்றில் உள்ள பொதுப்படையான அம்சங்களை மாத்திரம் இயன்றவரை தேச பாஷையில் மொழி பெயர்த்துப் பிள்ளைகளுக்குச் சிறிது சிறிதாகக் கற்பித்தால் போதும்*

தேசீயக் கல்வியின் ஆதாரமே தாய்மொழியில், தேசிய மொழியில் கற்பிக்கப்படுவதாகும்.

தேசமொழியைக் கற்பித்தலுக்கான மொழிக் கொள்கையாகப் பாரதியார் கருதுவதாவது:

> *பூமிபடங்கள், கோளங்கள் முதலியவற்றி லெல்லாம் பெயர்கள் தேச பாஷையிலேயே எழுதப்பட்டிருக்க வேண்டும். தேச பாஷையின் மூலமாகக் கல்வி பயிற்றுவிக்கும் போது படங்கள் மாணவர்களுக்கு எளிதில் புரியும். தேச பாஷைகளில் கல்வி பயிற்று விக்கப்படும்போதுதான் நாட்டுணர்வும் ஏற்படும். தேசிய ஒருமைப்பாடு பற்றிய எண்ணம் மாணவர்களுக்கு ஏற்படும்*

என்கிறார் பாரதியார்.

மொழியைச் செம்மைப்படுத்திச் செழிப்படையச் செய்ய வேண்டும் என்று விரும்பிய பாரதியார் அதை எப்படி செம்மைப்படுத்த வேண்டும் என்று கூறுகையில்,

> *பௌதிக சாஸ்திரங்கள் கற்றுக் கொடுப்பதில் மிகவும் தெளிவான எளிய தமிழ்நடையில் பிள்ளைக்கு மிகவும் சுலபமாக விளங்கும்படி சொல்லிக் கொடுக்க வேண்டும். இயன்ற இடத்தி லெல்லாம் பதார்த்தங்களுக்குத் தமிழ்ப் பெயர்களையே உபயோகப்படுத்த வேண்டும். திருஷ்டாந்தரமாக 'ஆக்ஸிஜன்', 'ஹைட்ரஜன்' முதலிய பதார்த்தங்களுக்கு ஏற்கனவே தமிழ்நாட்டில் வழங்கப்பட்டி ருக்கும் பிராணவாயு, ஜலவாயு என்ற நாமங்களையே வழங்க வேண்டும். தமிழ்ச் சொற்கள் அகப்படாவிட்டால் சமஸ்கிருத பதங்களை வழங்கலாம். பதார்த்தங்களுக்கு மட்டுமேயன்றிக் கிரியைகளுக்கும், அவஸ்தைகளுக்கும் (நிலைமைகளுக்கும்) தமிழ் சமஸ்கிருத மொழிகளையே வழங்குதல் பொருந்தும். இந்த இரண்டு*

> *பாஷைகளிலும் பெயர்கள் அகப்படாத இடத்தில் இங்கிலீஷ் பதங்களையே உபயோகிக்கலாம். ஆனால் குணங்கள், செயல்கள், நிலைமைகள் இவற்றுக்கு இங்கிலீஷ் பதங்கள் ஒருபோதும் வழங்கக் கூடாது. பதார்த்தங்களின் பெயர்களை மாத்திரமே இங்கிலீஷில் சொல்லலாம் வேறு வகையில் உணர்த்த இயலாவிடின்*

என்கிறார் பாரதியார்.

தெரிந்த மொழியில் எதையும் கற்பதையே பாரதியார் விரும்பினார். வடமொழி கடவுள்மொழி என்பதற்காக பொருளுண ராமல் பகவத்கீதையை ஒலிப்பிழை செய்து கட்டாயமாகக் கற்பதை அவர் வெறுத்தார்.

> *பகவானை எந்த மொழியில் வேண்டு மானாலும் தோத்தரிக்கலாம். தெரியாத பாஷையில் அனர்த்தத்தோடு கஷ்டப் பட்டுக் கொண்டு திண்டாட வேண்டாம்*

என்று தமது மனைவி செல்லம்மாவிற்கு அறிவுறுத்தினார். ஆண்பெண் அனைவருக்கும் இலவசக் கல்வி வழங்குவது அரசினரின் கடமை என்றும் வலியுறுத்தியிருக்கிறார்.

> *ஆண் பெண் அடங்கலாக நாட்டிலுள்ள எல்லாக் குழந்தை களுக்கும் இனாம் படிப்பு கட்டாயமாய்ச் சொல்லி வைக்கவேண்டும். இது ராஜாங்கத்தாருடைய கடமை*

என்று அரசுக்குக் கூறுகிறார்.

ஆங்கிலப் பயிற்சியால் பயனில்லை என்று கருதியவர் இவர். ஆங்கில மொழிவழிக் கல்வியால் கணிதம், இலக்கியம், வணிகம், பொருளாதாரம், தத்துவம் போன்ற பல துறைகளில் எதைக் கற்றாலும் அதனால் எவ்விதப் பயனுமில்லை என்று கூறியதோடு அதற்குக் காரணமும் காட்டியுள்ளார்.

*கணிதம் பன்னிரண் டாண்டு பயில்வர் பின்*
*கார் கொள் வானிலோர் மீனிலை தேர்ந்திலார்*
*அணிசெய் காவியமா யிரங் கற்கினும்*
*வணிகமும் பொருணூலும் பிதற்றுவார்*
*வாழு நாட்டிற் பொருள் கெடல் கேட்டிலார்*

என்று ஆங்கில மொழியின் பயனின்மையைச் சுட்டுகிறார். மேலும் ஆங்கில மொழியில் கல்வி பயில்வோர் நம்முடைய தமிழ்மொழி யிலேயே எழுதப்பட்டுள்ள சிறந்த இலக்கியங்களைக் கற்கும் வாய்ப்பினையும் இந்திய நாட்டின் பிற இடங்களில் வாழும் மக்கள் பேசும் மொழிகளின் இலக்கண இலக்கியங்களையும் அறிந்து கொள்ளும் வாய்ப்பினையும் அவர்கள் இழந்துவிடுவதாகக் கூறுகிறார்.

ஒரு காலத்தில் உயர்கல்வி ஆங்கிலத்திலேயே கற்றுத் தரப்பட வேண்டும் என்ற நிலை இருந்தது. இன்றும் அந்நிலை நீங்கிய பாடில்லை. ஆங்கிலமொழியில் கல்வி கற்பதற்கு வசதியும் வாய்ப்புகளும் அதிகமாக இருந்தன. அந்த வசதி தேசிய மொழியைக் கற்பதில் இல்லாமல் இருந்தது.

ஒரு மொழியின் பயன் மற்ற துறைகளைக் காட்டிலும் கல்வித் துறையில் வழங்கப்படும்போதுதான் சிறப்படைகிறது.

சமுதாயத்தில் ஏற்படும் மாற்றத்திற்கு ஏற்ப அவ்வப்போது மொழியிலும் மாற்றங்கள் நடைபெற்று நடந்துள்ளன. அந்நிய மொழி மூலம் கல்வி பயல்வதையே உயர்வாகக் கருதினார்கள்.

இன்றைய நிலையில் பல்கலைக்கழகங்கள் மற்றும் கல்லூரிகளில் ஆங்கில மொழியோடு தமிழையும் பயிற்று மொழியாகக் கற்றுத் தருகின்றனர்.

இந்தியாவில் உலக மக்களுள் பத்தில் ஒரு பகுதியினர் ஆங்கிலத்திற்கு உரியவர் என்ற நினைப்புடன் உள்ளனர்.

ஆங்கிலேயர்களிடம் ஏற்பட்ட மொழிப்பற்றுதான் ஆங்கிலத்தை ஒரு சிறந்த இடத்திற்குக்கொண்டு செல்லமுடிந்தது. உலக மக்களால் ஒரு காலத்தில் இகழப்பட்ட மொழி ஆங்கிலம்.

ஆங்கிலேயர்களின் கடும் உழைப்பே ஆங்கிலமொழி இன்று உலகமொழியாகத் திகழுவதற்குக் காரணமாகும்.

இலத்தீன் மொழி அரசோச்சியபோது அதனை விரும்பாத கல்விக்கூடத் தலைமையாசிரியர் ஒருவர் தமது மொழிப்பற்றை வெளிப்படுத்துகையில், கல்வியின் பொருட்டு ஒரு மொழிக்கு அடிமையாவது அடிமைத் தன்மைகளுள் பெரிதேயாகும். பிற மொழிகளைக் கற்பதனால் மிகுந்த நேரத்தை இழக்கின்றோம். பிறமொழியால் பெறும் அதே செல்வத்தை நம் மொழியில் குறைந்த காலத்தில் பெறலாம். நம்முடைய மொழி நம் உரிமையையும், விடுதலையையும் வெளிப்படுத்துகின்றது. இலத்தீன் மொழி நம் உரிமையையும், விடுதலையையும் வெளிப்படுத்துகின்றது. இலத்தீன் மொழ நம் உரிமையையும், விடுதலையையும் வெளிப்படுத்துகின்றது. இலத்தீன் மொழி நம்முடைய அடிமைத்தன்மையையும், இழிவையும் நினைவூட்டுகின்றது. உரோம் நகரை விரும்புகின்றேன். ஆனால் இலண்டன் மாநகரை அதனினும் மிகுதியாக நான் தொழுகின்றேன். ஆங்கிலத்தைத் தொழுகின்றேன் என்று கூறியுள்ளது நோக்கத் தக்கது. தமிழை வணங்குகின்றோம் என்றால் நகையாடும் நண்பர்கள் நல்லறிவு பெறட்டும். அரிய கலைகளை ஆங்கிலத்தின் வழியாகத்தான் கற்றல் வேண்டும் என்போர் அத்தலைமை ஆசிரியர் உரையை உளங்கொண்டு திருந்துவார்களாக.

## ஏனைய துறைகளில் தமிழ்மொழி ஆட்சி

தமிழ்மொழி மீது பாரதி கொண்ட பற்றால் தமிழர்கள் தமிழ்மொழியை உபயோகிக்கும் பாங்கினைக் கண்டு வருந்துகிறார்.

தமிழ் மன்னர்கள் தமிழ்நாட்டை ஆண்ட வரலாற்றுச் செய்திகளையும் அவர்கள் வளர்த்த அறத்தினையும் அறிகின்ற வாய்ப்பினை இழந்துவிடுவதாகக் கூறி வருந்துகிறார்.

*தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற – எங்கள்*
*தாயென்று கும்பிடடி பாப்பா*
*அமிழ்தில் இனியதடி பாப்பா – நம்*
*ஆன்றோர்கள் தேசமடி பாப்பா*

*சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே – அதைத்*
*தொழுது படித்திடடி பாப்பா*
*செல்வம் நிறைந்த ஹிந்துஸ்தானம் – அதைத்*
*தினமும் புகழ்ந்திடடி பாப்பா*

என்று வேண்டுகிறார்.

இன்றைய சமுதாயம் தமிழ்மொழிக்குக் கொடுக்கும் மரியாதையைக் கண்ட அறிஞர் அண்ணா,

*'தமிழ்' வகுப்பு என்றால் இஷ்டப்பட்டால்*
*போகிற வகுப்பு என்று நினைத்தார்கள்.*
*தமிழ் வகுப்பு நடந்து கொண்டே இருக்கும்.*
*தெய்வ யானையை விட்டுவிட்டு வள்ளியைத்*
*தேடிக்கொண்டு முருகன் போவது போல்*
*மாணவர்கள் வாத்தியாரை விட்டுவிட்டு*
*வெளியே போய் விடுகிறார்கள்.*

என்கிறார்.

அனைத்துத் துறைகளில் உள்ள பாடங்களையும் தமிழ்மொழியில் கற்றத்தர வேண்டுமெனப் பாரதியார் விரும்புகிறார். எடுத்துக்காட்டாக,

1. *எழுத்து, படிப்பு, கணக்கு*
2. *சரித்திரப் பாடங்கள்*
3. *பூமி சாஸ்திரம்*
4. *மதப்படிப்பு*
5. *ராஜ்ய சாஸ்திரம்*
6. *பொருள் நூல்*
7. *ஸயன்ஸ் அல்லது பௌதிக சாஸ்திரம்*
8. *கைத்தொழில், விவசாயம், தோட்டப்பயிற்சி, வியாபாரம்*
9. *சரீரப் பயிற்சி*
10. *யாத்திரை*

இப்பாடங்கள் அவரவர் தாய்மொழியில் பயிற்றுவிக்கப்பட வேண்டும் என்று கூறுகிறார். தாய்மொழியில் கற்பிக்கப்படும் பாடம்தான் புரிந்துகொள்ள எளிமையாக இருக்கும் என்கிறார்.

**சரித்திரப் பாடங்கள்**

> *ஹிந்து தேச சரித்திரம் மாத்திரமே யல்லாது சௌகர்யப்பட்டால் இயன்ற வரை அராபிய, பாரசீக, ஐரீஷ், போலீஷ், ருஷிய, எகிப்திய, இங்கிலீஷ், பிரான்சு, அமெரிக்க, இத்தாலிய, கிரேக்க, ஜப்பானிய, துருக்கி தேசங்கள் முதலியவற்றின் சரித்திரங்களும் சில முக்கியமான கதைகளும் த்ருஷ்டாந்தங்களும் பயிற்சி கொடுக்க ஏற்பாடு செய்தல் நல்லது*

என்று குறிப்பிடுகிறார்.

**பூமி சாஸ்திரம்**

> *பாரத பூமி சாஸ்திரங்களில் மற்ற மாகாணங்களில் வசிக்கும் ஜனங்கள், அங்கு வழங்கும் முக்கியமான ஜாதிப் பிரிவுகள், தேச முழுமையும் வகுப்புகள் ஒன்றுபோலிருக்கும் தன்மை, மத ஒற்றுமை, பாஷைகளின் நெருக்கம், வேத புராண இதிகாசங்கள் முதலிய நூல்கள் பெருமைப்பட வழங்குதல், புண்ணிய க்ஷேத்திரங்கள் அவற்றின் தற்கால நிலை, இந்தியாவிலுள்ள பெரிய மலைகள், நதிகள், இந்தியாவின் விளைபொருட்கள் அளவற்ற செல்வம், ஆஹாரபேதங்கள், தற்காலத்தில் இந்நாட்டில் வந்து குடியிருக்கும் பஞ்சம், தொத்து நோய்கள், இவற்றின் காரணங்கள், ஜலவசதிக் குறைவு வெளிநாடுகளுக்கு ஜனங்கள் குடியேறிப் போதல் இதனை மாணவர்களுக்குத் தெளிவுறுத்த வேண்டும்*

என்கிறார் பாரதியார்.

தமிழ்மொழியை மேலும் மேலும் கற்க மாணவர்களுக்கு ஆர்வத்தை ஏற்படுத்த வேண்டும். தமிழ் மொழியாற்றலை வெளிப் படுத்தும் கதை, கட்டுரை, கருத்தரங்கம் எது என்றாலும் அதை அரசாங்கம் ஆதரிக்க வேண்டும்.

தமிழ்மொழிப் பாடங்கள் மாணவர்களுக்கு வெறுப்பூட்டுவன வாக இருக்கக்கூடாது. தமிழ் படிப்பதில்தான் எனக்கு விருப்பம் என்று மாணவர்கள் கூறும் நிலை உருவாக வேண்டும்.

**20ஆம் நூற்றாண்டில் தமிழ்மொழியின் சரிவு**

20ஆம் நூற்றாண்டில் தமிழ்மொழி தனது சொந்த நடையை இழந்து வடமொழிக் கலப்புடனும் அந்நிய மொழியுடனும் வழங்கும் நிலை அடைந்தது. இந்த நிலையை மாற்றித் தமிழர்களுக்கு அவர்களின் செயலை உணர வைத்ததில் பாரதியாரின் பங்கு மகத்தானது எனலாம்.

எனவே, பாரதியிடம் காணப்படும் மொழி உணர்வு, எளிய மக்களைத் தூண்டிவிட்டு அல்லல்படவைக்கும் எதிர்நிலை உணர்வன்று. திட்டமாக மக்களை நேர்வழியிலும், சுயமரியாதை வழியிலும் நடத்திச் செல்வதற்குப் பயன்படும் நேர்நிலை உணர்வாகும். ஆழ்வார்களும், நாயன்மார்களுமாகிய அகச் சமயத்தவர்கள் சமண, பௌத்தர் ஆகிய புறச் சமயத்தவர்களை வெல்வதற்குச் சமயக் காலத்தில் எழுப்பிய மொழி உணர்வினைப் போல 20ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பாரதி என்ற ஒரு சாரதி மட்டும் ஆங்கிலேயர்க்கு எதிராகத் தமிழ்மக்கள் தம் சிந்தனையைத் திருப்புவதற்குத் தம் மொழியுணர்வைப் பயன்படுத்தினார் என்றால் அது மிகையாகாது.

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
# சென்னை - 600 113
## அண்மை வெளியீடுகள்

| | ரூ.பை. |
|---|---|
| தொல்காப்பியம்-எழுத்ததிகாரம் மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 200.00 |
| தொல்காப்பியம்-சொல்லதிகார மூலமும் சேனாவரையருரையும் | 200.00 |
| தொல்காப்பியம்-பொருளதிகார மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 325.00 |
| தொல்காப்பியம் - பொருளதிகார மூலமும் பேராசிரியர் உரையும் | 300.00 |
| சங்க இலக்கிய ஆய்வு தெ.பொ.மீ.யும் மேலை அறிஞரும் | 60.00 |
| திராவிட மொழி இலக்கியங்கள் | 200.00 |
| வா.கீ.ச. கலாநிதி கி.வா.ஜகந்நாதன் | 60.00 |
| நாசுதிராதிக்-ஞாலமுதன்மொழிஆய்வுகளுக்குப்பாவாணர் தரும் ஒளி | 35.00 |
| தமிழ்ச்சொற் பிறப்பாராய்ச்சி | 45.00 |
| மொழி பெயர்ப்பியல் | 45.00 |
| சி.வை. தாமோதரம்பிள்ளை | 40.00 |
| சொல்லிலக்கணக் கோட்பாடு தொல்காப்பியம் - முதல் பகுதி | 70.00 |
| இசுலாமியச் சிற்றிலக்கியங்கள் | 40.00 |
| பாவாணர் கடவுள் நம்பிக்கையும் சமயச் சால்பும் | 30.00 |
| மகளிர் முன்னேற்றத்தில் "அவள் விகடன்" இதழின் பங்களிப்பு | 35.00 |
| திருக்குறள் உரைச் சிந்தனைகள் | 50.00 |
| தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் | 120.00 |
| மீனவர் சமுதாய நாட்டுப்புறப் பாடல்கள் | 35.00 |
| A Course in Modern Standard Tamil | 65.00 |
| கம்பன் களஞ்சியம் | 280.00 |
| மொழியியல் நோக்கில் தொல்காப்பிய சங்க இலக்கிய ஆய்வுகள் | 40.00 |
| தமிழர் பண்பாட்டுச் சொற்கோவை | 250.00 |
| தமிழிலக்கியக் குறியீடுகள் அகராதி | 225.00 |
| அரங்கேற்று காதை ஆராய்ச்சி | 140.00 |
| பழந்தமிழ் அமைப்பியல் மற்றும் குறியியல் ஆய்வுகள் | 45.00 |
| இந்தியச் சூழலில்மொழிஇழப்பு ஒரு சமுதாய மொழியியல் கண்ணோட்டம் | 60.00 |
| பழந்தமிழ் அறிவியல் | 45.00 |
| குலோத்துங்கன் பார்வையில் சமுதாயம் | 70.00 |
| இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிஞர்கள் தொகுதி-1 | 100.00 |
| இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிஞர்கள் தொகுதி-2 | 100.00 |
| நீறணி பவளக் குன்றம் (ஒன்பதாம் திருமுறை ஆய்வுநூல்) | 35.00 |
| உலகப் பகுத்தறிவு நீரோட்டத்தில் பெரியார் | 35.00 |
| தமிழறிஞர் அடிகளாசிரியரின் சிறுவர் இலக்கியப் பாடல்கள் | 30.00 |
| ஈழத்தில் கண்ணகி கலாச்சாரம் | 30.00 |
| சிறுபஞ்மூலம்-ஒருசமூகவியல் பார்வை | 30.00 |
| இந்தி நாடகப் பனுவல் (ஆடி மாதத்தில் ஒரு நாள்) | 50.00 |
| திராவிட இயக்கத்தில் அன்னை மணியம்மையாரின் பங்கு | 40.00 |
| பண்பாட்டுப் பார்வையில் திருமந்திரம் | 70.00 |
| காரைக்கால் அம்மையார் பாடல்கள் - ஓர் ஆய்வு | 40.00 |
| சொல்லாடல்கள் | 75.00 |
| இலக்கணத்தொகை யாப்பு-பாட்டியல் | 300.00 |

---

Pub.No. 664 பாரதியாரின் தமிழ் மொழிப் பற்று 50.00